உ

சிவமயம்

# விநாயக கவசம்,

## சிவகவசம், சத்திகவசம்,
## சரஸ்வதிதோத்திரம், இலக்குமிதோத்திரம்

## மூலமும்,

காஞ்சீபுரநிவாஸி
வித்வசிரேஷ்டராகிய
ஸ்ரீமாந் - இராமயோகிகள் அவர்களால்
இயற்றப்பெற்ற

## விருத்தியுரையும்.

இவை
அக்கம்மாள்பேட்டை
இராமாநுஜசெட்டியார் குமாரர்
அ. மகாதேவ செட்டியாரால்
சென்னை:
மதராவ்ஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பெற்றன.

[முதற்பதிப்பு]
1916
விலை அணா 5



## குறிப்பு

இப்போது நடந்துவரும் ஐரோப்பிய யுத்தம் காரணமாகச் சீமையிலிருந்து அச்சுப்போடும் காகிதம் வாராமையால் இப்புத்தகத்தை ரப் காகிதத்தில் அச்சிடும்படி நேர்ந்தது. இப்பதிப்பு விற்று முடிந்த பிறகு, அடுத்த பதிப்பு நல்ல கிளேஸ் கடிதத்தில் அச்சிடப்படும்.

உ

கணபதி துணை.

# விநாயக கவசம்

## மூலமும் உரையும்.

[ஆதியில் இக்கவசத்தைக் காசிபமுனிவர் முற்கலமுனிவருக்கு அருளிச்செய்ய, அவர் மாண்டவியமுனிவருக்கு அநுக்கிரகிக்க, அவர் மரீசிமுனிவருக்கு உபதேசித்தருள, அவர் பல முனிவர்களுக்குத் திருவாய்மலர்ந்தருளிச் செய்தனரென்றறிக.

நித்தியகருமங்களை முடித்துப் பரிசுத்தமாகிய ஓரிடத்தில் இருந்துகொண்டு ஒன்றுபட்ட மனசுடனே விநாயகரைத் தியானித்து இதைச் செபிக்கவேண்டும்.]

வளர்சிகையைப் பராபரமாய் வயங்குவிநா யகர்காக்க வாய்ந்த சென்னி, யளவுபடா வதிகசவுந் தரதேக மதோற்க டர்தா மமர்ந்து காக்க, விளரறநெற் றியையென்றும் விளங் கியகா சிபர்காக்க புருவந் தம்மைத், தளர்வின்மகோ தரர் காக்க தடவிழிகள் பாலசந் திரனர் காக்க.

(பதவுரை.) வளர் சிகையை-விருத்திபடையாநின்ற சிகையை, பராபரமாய் வயங்கு - பராத்பரமாய் விளங்குகிற, விநாயகர் காக்க - விநாயகர் காக்கக்கடவர்; வாய்ந்த - பொருந்திய, சென்னி - தலையை, அளவுபடா - அளவுக்குட்படாத, அதிக சவுந்தர தேகம் - மிகுந்த அழகாகிய திருமேனியையுடைய, மதோற்கடர் - மதோற்கடரானவர், அமர்ந்து காக்க - விரும்பிக் காக்கக்கடவர்; விளர் அற - வெளுப்பு நீங்கும்படி, நெற்றியை - லலாடத்தை, என்றும் விளங்கிய - எக்காலத்

தும் விளங்குகிற, காசிபர் காக்க - காசிபரானவர் காக்கக்கடவர்; புருவம் தம்மை - இரண்டு புருவங்களையும், தளர்வு இல் - தளர்ச்சியற்ற, மகோதரர் காக்க - மகோதரரானவர் காக்கக்கடவர்; தடம் - விசாலமான, விழிகள் - நேத்திரங்களை, பாலசந்திரனுர் காக்க - பாலசந்திரனுர் காக்கக்கடவர்.

(பொழிப்புரை.) விருத்தியடையாநின்ற சிகையை பராதபரமாய் விளங்குகிற விநாயகர் காக்கக்கடவர்; பொருந்திய தலையை அளவுக்குட்படாத மிகுந்த அழகாகிய திருமேனியையுடைய மதோற்கடரானவர் விரும்பிக் காக்கக்கடவர்; வெளுப்பு நீங்கும்படி லலாடத்தை எக்காலத்தும் விளங்குகிற காசிபரானவர் காக்கக்கடவர்; இரண்டு புருவங்களையும் தளர்ச்சியற்ற மகோதரரானவர் காக்கக்கடவர்; விசாலமான நேத்திரங்களை பாலசந்திரனுர் காக்கக்கடவர்.

(கருத்துரை.) சிகை முதலியவைகளை விநாயகர் முதலியோர் காக்கக்கடவர்.

(விசேடவுரை.) விநாயக கவசம்: விநாயக ஸ்தோத்ரமாகிய கவசம் என விரியும். கவசம் - சட்டை; இரும்பு முதலியவற்றுற் செய்யப்பட்ட கவசமானது பகைவர் பிரயோகிக்கிற அம்பு முதலியவை உடம்பின்மேற்பட்டு வருத்தாதிருக்கச் செய்வதுபோல இந்த விநாயக கவசமும் உடம்புயிர்களுக்கு நேரிடுந் துன்பங்களைத் தடுத்துக் காக்க வல்லதாதலால் இதற்கு விநாயக கவசம் எனப் பெயராயிற்று. விநாயகர் - தனக்கு மேல் ஒரு தலைவரை யுடையரல்லாதவர். மதோற்கடர் - மதச்செருக்கை யுடையவர். மகோதரர் - பெரு வயிற்றை யுடையவர். பாலசந்திரனுர்-இளம்பிறையை யணிந்தவர். அமர்தல்-விரும்புதல். ()

கவின்வளரு மதரங்கச முகர்காக்க தாலங்கணக் கிரீடர் காக்க, நவில்சிபுகங் கிரிசைசுதர் காக்கநனி வாக்கைவி நாயகர்தாங் காக்க, வவிர்நகைதுன் முகர்காக்க வள்ளெழிற்செஞ்

செவிபாச பாணி காக்க, தவிர்தலுறு இளங்கொடிபோல் வளர்மணிநா சியைச்சிந்தி தார்த்தர் காக்க.

(ப-ரை.) கவின் வளரும் அதரம் - அழகு வளராநின்ற அதரத்தை, கசமுகர் காக்க - கஜமுகரானவர் காக்கக்கடவர்; தாலம் - நாவை, கணக்கிரீடர் காக்க-கணக்கிரீடரானவர் காக்கக்கடவர்; நவில் - சொல்லப்பட்ட, சிபுகம்-முகவாய்க்கட்டையை, கிரிசைசுதர் காக்க-கிரிசைசுதரானவர் காக்கக்கடவர்; நனி - மிகுதியாக, வாக்கை - வாக்கினை, விநாயகர் காக்க - விநாயகரானவர் காக்கக்கடவர்; அவிர்-பிரகாசிக்கிற, நகை - பல்லை, துன்முகர் காக்க - துன்முகரானவர் காக்கக்கடவர்; அள் - அள்ளிக்கொள்ளுதற்குரிய, எழில் - அழகையுடைய, செம் செவி - செவ்விய செவியை, பாசபாணி காக்க - பாசபாணியானவர் காக்கக்கடவர்; தவிர்தல் உறாத - தவறாத, இளங்கொடிபோல் வளர் - இளங்கொடிபோல வளர்கின்ற, மணி - அழகிய, நாசியை - மூக்கை, சிந்திதார்த்தர் காக்க - சிந்திதார்த்தரானவர் காக்கக்கடவர்.

(பொ - ரை.) அழகுவளராநின்ற அதரத்தை கஜமுகரானவர் காக்கக்கடவர்; நாவை கணக்கிரீடரானவர் காக்கக்கடவர்; சொல்லப்பட்ட முகவாய்க்கட்டையை கிரிசைசுதரானவர் காக்கக்கடவர்; மிகுதியாக வாக்கினை விநாயகரானவர் காக்கக்கடவர்; பிரகாசிக்கின்ற பல்லை துன்முகரானவர் காக்கக்கடவர்; அள்ளிக்கொள்ளுதற்குரிய அழகையுடைய செவ்விய செவியை பாசபாணியானவர் காக்கக்கடவர்; தவறாத இளங்கொடிபோல வளர்கின்ற அழகிய மூக்கை சிந்திதார்த்தரானவர் காக்கக்கடவர்.

(க - ரை.) அதரம் முதலியவற்றை கசமுகர் முதலானோர் காக்கக்கடவர்.

(வி - ரை.) கஜமுகர் - யானைமுகத்தை யுடையவர். தாலம்-வடசொல். கணக்கிரீடர் - கூட்டமாகிய கிரீடத்தை யுடையவர். கிரிசைசுதர் - பார்வதி புத்திரர்; கிரிசை - பார்வதி (மலையரையன் புதல்வி),

சுதர் - புத்திரர். துன்முகர் - மாறுபட்ட முகத்தையுடையவர். பாச பாணி - பாசத்தைக் கையிலுடையவர்; பாசம் - கயிறு. சிந்திதார்த்தர்- அன்பர் நினைத்த எல்லாப் பொருள்களையும் தந்தருளவல்லவர். சிபுகர்- வடசொல். (உ)

காமருபூ முகந்தன்னைக் குணேசர்நனி காக்ககளங் கணேசர் காக்க, வாமமுறு மிருதோளும் வயங்குகந்த பூர்வ சர்தா மகிழ்ந்து காக்க, வேமமுறு மணிமுலைவிக் கினவிநா சன்காக்க விதயந் தன்னைத், தோமகலுங் கணநாதர் காக்க வகட் டினைத்துலங்கே ரம்பர் காக்க.

(ப - ரை.) காமர் - அழகிய, பூ - தாமரை மலர்போன்ற, முகம் தன்னை - முகத்தை, நனி - மிகுதியாக, குணேசர் காக்க - குணேச ரானவர் காக்கக்கடவர்; களம் - கழுத்தை, கணேசர் காக்க - கணேச ரானவர் காக்கக்கடவர்; வாமம் உறும்-அழகு மிகுந்த, இரு தோளும்- இரண்டு தோள்களையும், வயங்கு - பிரகாசிக்கிற, கந்தபூர்வசர் - கந்த பூர்வசரானவர், மகிழ்ந்து காக்க-மகிழ்ந்து காக்கக்கடவர்; ஏமம் உறு - இன்ப மிகுந்த, மணி முலை - அழகிய முலையை, விக்கின விநாசன் காக்க - விக்கினவிநாசரானவர் காக்கக்கடவர்; இதயம்தன்னை - இரு தயத்தை, தோம் அகலும் - குற்றம் நீங்கின, கணநாதர் காக்க - கண நாதரானவர் காக்கக்கடவர்; அகட்டினை - வயிற்றை, துலங்கு-விளங்கு கிற, ஏரம்பர் காக்க - ஏரம்பரானவர் காக்கக்கடவர்.

(பொ - ரை.) அழகிய தாமரை மலர்போன்ற முகத்தை மிகுதி யாக குணேசரானவர் காக்கக்கடவர்; கழுத்தை கணேசரானவர் காக் கக்கடவர்; அழகு மிகுந்த இரண்டு தோள்களையும் பிரகாசிக்கிற கந்த பூர்வசரானவர் மகிழ்ந்து காக்கக்கடவர்; இன்ப மிகுந்த அழகிய முலை யை விக்கினவிநாசரானவர் காக்கக்கடவர்; இருதயத்தைக் குற்றம் நீங் கின கணநாதரானவர் காக்கக்கடவர்; வயிற்றை விளங்குகிற ஏரம்ப ரானவர் காக்கக்கடவர்.

(க-ரை.) முகம் முதலியவற்றைக் குணேசர் முதலானவர் காக்கக்கடவர்.

(வி - ரை.) குணேசர் - மங்கள குணங்களாற் றலைமைபூண்டவர். கனம் - வடசொல். கணேசர் - கணநாதர். கந்தபூர்வசர் - முருகருக்குத் தமையனார். விக்நவிநாசன் - இடையூறுகளை நாசஞ் செய்பவன். கணநாதர் - கணங்களுக்குத் தலைவர். அகடு - வயிறு. ஏரம்பர் - உருத்திரமூர்த்திக்குச் சமீபத்திலிருப்பவர். இதயம் - ஹ்ருதயம் என்னும் வடசொற்றிரிபு. (ங)

பக்கமிரண் டையுந்தரா தரர்காக்க பிருட்டத்தைப்பாவ
நீக்கும், விக்கினக ரன்காக்க விளங்கிலிங்கம் வியாளபூ டணர்
தாங் காக்க, தக்ககுய்யந் தன்னைவக் கிரதுண்டர் காக்கசக
னத்தை யல்ல, லுக்ககண பன்காக்க வூருவைமங் களமூர்த்தி
யுவந்து காக்க.

(ப - ரை.) பக்கம் இரண்டையும்-இரண்டு பக்கங்களையும், தராதரர் காக்க - தராதரர் காக்கக்கடவர்; பிருட்டத்தை - ப்ருஷ்ட பாகத்தை, பாவம் நீக்கும் - பாவத்தை யொழிக்கின்ற, விக்கினகரன் காக்க-விக்நகரர் காக்கக்கடவர்; விளங்கு இலிங்கம்-பிரகாசிக்கிற லிங்கத்தை, வியாளபூடணர் காக்க - வ்யாளபூஷணர் காக்கக்கடவர்; தக்க குய்யம் தன்னை - தகுதியாகிய குய்யத்தை, வக்கிரதுண்டர் காக்க-வக்ரதுண்டர் காக்கக்கடவர்; சகனத்தை - சகநபாகத்தை, அல்லல் உக்க - துன்பமற்ற, கணபன் காக்க - கணபர் காக்கக்கடவர்; ஊருவை - தொடைகளை, மங்களமூர்த்தி - மங்களமூர்த்தியானவர், உவந்து காக்க-மகிழ்ந்து காக்கக்கடவர்.

(பொ - ரை.) இரண்டு பக்கங்களையும் தராதரர் காக்கக்கடவர்; ப்ருஷ்டபாகத்தை பாவத்தை யொழிக்கின்ற விக்நகரர் காக்கக்கடவர்; பிரகாசிக்கின்ற லிங்கத்தை வ்யாளபூஷணர் காக்கக்கடவர்; தகுதி

யாகிய குய்யத்தை வக்ரதுண்டர் காக்கக்கடவர்; சகந பாகத்தைத் துன்பமற்ற கணபர் காக்கக்கடவர்; தொடைகளை மங்கள மூர்த்தி யானவர் மகிழ்ந்து காக்கக்கடவர்.

(க-ரை.) இரண்டு பக்கங்கள் முதலானவற்றைத் தாரதரர் முதலானோர் காக்கக்கடவர்.

(வி - ரை.) தாரதரர் - உலகத்தைத் தாங்குவோர். பிருட்டம் - ப்ருஷ்டம் என்னும் வடசொற்றிரிபு; இதற்குப் பின்பக்கம் என்பது பொருள். விக்நகரன் - தன்னை வணங்காதவர்க்கு இடையூறுகளை யுண்டாக்குவோன். வியாளபூடணர் - சர்ப்பாபரணத்தை யுடையவர். வக்கிரதுண்டர் - வளைவாகிய துதிக்கையை யுடையவர். சகநம் - தொடையினுட்பக்கம். கணபன் - கணநாதன். மங்களமூர்த்தி - அழகாகிய திருவுருவத்தை யுடையவர். ஊரு - வடசொல். (சு)

தாழ்முழந்தாள் மகாபுத்தி காக்கவிரு பதமேக தந்தர் காக்க, வாழ்கரங்கிப் பிரப்பிரசா தனர்காக்க முன்கையை வணங்கு வார்நோ, யாழ்தரச்செய் யாசாபூ ரகர்காக்க விரல் பதும வத்தர் காக்க, கேழ்கிளரு நகங்கள்விநா யகர்காக்க கிழக்கினிற்புத் தீசர் காக்க.

(ப - ரை.) தாழ் - நீண்ட, முழந்தாள்-முழங்காலை, மகாபுத்தி காக்க-மஹாபுத்தியானவர் காக்கக்கடவர்; இரு பதம்-இரண்டு பாதங்களையும், ஏகதந்தர் காக்க - ஏகதந்தரானவர் காக்கக்கடவர்; வாழ் கரம் - வாழ்க்கைக் கேதுவாகிய கைகளை, கிப்பிரப்பிரசாதனர் காக்க-கிப்ரப்ரஸாதனர் காக்கக்கடவர்; முன் கையை-முன்னங் கைகளை, வணங்குவார் நோய் - வழிபடுவோரது துன்பத்தை, ஆழ்தரச்செய் - அதோகதியாய்ப் போகப் பண்ணுகிற, ஆசாபூரகர் காக்க - ஆசாபூரகர் காக்கக்கடவர்; விரல் - விரல்களை, பதுமம் அத்தர் காக்க - பத்மஹஸ்தர் காக்கக்கடவர்; கேழ் கிளரும் நகங்கள் - ஒளியோடு விளங்குகிற நகங்களை,

விநாயகர் காக்க - விநாயகர் காக்கக்கடவர்; கிழக்கினில் - கீழ்த்திசையில், புத்தீசர் காக்க - புத்தீசர் காக்கக்கடவர்.

(பொ - ரை.) நீண்ட முழங்காலை மஹாபுத்தியானவர் காக்கக்கடவர்; இரண்டு பாதங்களையும் ஏகதந்தரானவர் காக்கக்கடவர்; வாழ்க்கைக் கேதுவாகிய கைகளை கிப்ரப்ரஸாதகர் காக்கக்கடவர்; முன்னங்கைகளை வழிபடுவோரது துன்பத்தை அதோகதியாய்ப் போகப் பண்ணுகிற ஆசாபூரகர் காக்கக்கடவர்; விரல்களை பத்மஹஸ்தர் காக்கக்கடவர்; ஒளியோடு விளங்குகிற நகங்களை விநாயகர் காக்கக்கடவர்; கீழ்த்திசையில் புத்தீசர் காக்கக்கடவர்.

(க-ரை.) முழங்கால் முதலியவற்றை மஹாபுத்தி முதலானோர் காக்கக்கடவர்.

(வி - ரை.) மகாபுத்தி - பேரறிவுடையவர்; ஏகதந்தர்-ஒற்றைக் கொம்பை யுடையவர். கிப்பிரப்பிரசாதனர் - க்ஷிப்ரப்ரஸாதகர் என்னும் வடசொற்றிரிபு; இதற்கு விரைவில் பயன் கொடுப்பவர் என்பது பொருள். ஆசாபூரகர்-அன்பரது விருப்பத்தைப் பூர்த்திபண்ணுவோர் (நிறைவேற்றுவோர்). பதுமஹத்தர் - தாமரை மலர்போலுங் கையினை யுடையவர். புத்தீசர் - அறிவினுற் றலைமை பூண்டவர் (ஸர்வஜ்ஞர்). (ரு)

அக்கினியிற் சித்தீசர் காக்கவுமா புத்திரர்தென் ளுசை காக்க, மிக்கநிரு தியிற்கணே சுரர்காக்க விக்கினவர்த் தனர் மேற் கென்னுங், திக்கதனிற் காக்கவா யுவிற்கசகன் ணன் காக்க திகழு தீசி, தக்கநிதி பன்காக்க வடகிழக்கி லீசநந் தனரே காக்க.

(ப - ரை.) அக்கினியில்-அக்கிநிதிசையில், சித்தீசர் காக்க-சித்தீசர் காக்கக்கடவர்; தென் ஆசை-தென்றிசையில், உமாபுத்திரர் காக்க-உமாபுத்திரரானவர் காக்கக்கடவர்; மிக்க-மேலான, நிருதியில்-நிருதி

திசையில், கணேசுரர் காக்க-கணேசுரரானவர் காக்கக்கடவர்; மேற்கு என்னும் திக்கு அதனில் - மேற்கென்கிற திசையில், விக்கினவர்த்தனர் காக்க - விக்நவர்த்தனர் காக்கக்கடவர்; வாயுவில் - வாயுதிசையில், கச கர்நன் காக்க - கஜகர்ணர் காக்கக்கடவர்; திகழ்-பிரகாசிக்கிற, உதீசி-வடதிசையில், தக்க - தகுதியாகிய, நிதிபன் காக்க - நிதிபர் காக்கக் கடவர்; வடகிழக்கில் - வடகீழ்த்திசையில், ஈசநந்தநரே காக்க-ஈசநந்த நரே காக்கக்கடவர்.

(பொ - ரை.) அக்கினிதிசையில் சித்தீசர் காக்கக்கடவர்; தென்றிசையில் உமாபுத்திரரானவர் காக்கக்கடவர்; மேலான நிருதிதிசையில் கணேசுரரானவர் காக்கக்கடவர்; மேற்கென்கிற திசையில் விக்ந வர்த்தனர் காக்கக்கடவர்; வாயுதிசையில் கஜகர்ணர் காக்கக்கடவர்; பிரகாசிக்கிற வடதிசையில் தகுதியாகிய நிதிபர் காக்கக்கடவர்; வடகீழ்த் திசையில் ஈசநந்தனரே காக்கக்கடவர்.

(க - ரை.) அக்கினிதிசை முதலானவற்றில் சித்தீசர் முதலானோர் காக்கக்கடவர்.

(வி - ரை.) சித்தீசர் - சித்திகளுக்குத் தலைவர், (ஞானத்தாற் றலைவர்) என்றலு மொன்று. உமாபுத்திரர்-உமாதேவியார்க்குப் புதல்வர். ஆசை - திக்கு. கணேசுரர்-கணநாயகர். விக்கினவர்த்தனர் - தன்னை வணங்காதவர்க்கு இடையூறுகளை மிகுவிப்பவர். கசகர்நன் - யானைச் செவியை யுடையவர். உதீசி-வடசொல். நிதிபன்-நிதிகளுக்குத் தலைவன் (குபேரன்). ஈசநந்தநர் - ஈசானர். அஷ்டதிக்பாலகரா யிருப்பவர் இவரே யாதலால் இவ்வாறு கூறினர். (சு)

ஏகதந்தர் பகன்முழுதுங் காக்கவிரவினுஞ்சந்தி யிரண்டன் மாட்டு, மோகையின்விக் கினகிருது காக்கவிராக் கதர்பூத முறுவே தாளம், மோகினிபே யிவையாதி யுயிர்த்திறத்தால் வருந்துயரு முடிவி லாத, வேகமுறு பிணிபலவும் விலக்குபுபா சாங்குசர்தாம் விரைந்து காக்க.

(ப-ரை.) பகல் முழுதும்-பகற்கால முழுதும், ஏகதந்தர் காக்க - ஏகதந்தர் காக்கக்கடவர்; இரவினும் - இராக்காலத்திலும், சந்தி இரண்டன் மாட்டும் - இரண்டு சந்த்யாகாலங்களிலும், ஓகையின் - சந்தோஷத்தோடு, விக்கினகிருது காக்க - விக்நக்ருதுவானவர் காக்கக்கடவர்; இராக்கதர் - ராக்ஷஸர், பூதம்-பூதங்கள், உறு வேதாளம்-மிகுதியாகிய வேதாளங்கள், மோகினி - மோஹினி, பேய் - பேய்கள், இவை ஆதி-இவை முதலாகிய, உயிர் திறத்தால் - உயிர்த்தொகையால், வரும் துயரும் - உண்டாகிற துன்பங்களையும், முடிவு இல்லாத-முடிவற்ற, வேகம் உறு - கடுமை மிகுந்த, பிணி பலவும் - பல நோய்களையும், விலக்குபு - விலக்கி, பாசாங்குசர்-பாசாங்குசரானவர், விரைந்து காக்க-விரைந்து காக்கக்கடவர்.

(போ - ரை.) பகற்கால முழுதும் ஏகதந்தர் காக்கக்கடவர்; இராக்காலத்திலும் இரண்டு சந்த்யாகாலங்களிலும் சந்தோஷத்தோடு விக்நக்ருதுவானவர் காக்கக்கடவர்; ராக்ஷஸர், பூதங்கள், மிகுதியாகிய வேதாளங்கள், மோஹினி, பேய்கள் இவை முதலாகிய உயிர்த்தொகையால் உண்டாகிற துன்பங்களையும் முடிவற்ற கடுமை மிகுந்த பல நோய்களையும் விலக்கி, பாசாங்குசரானவர் விரைந்து காக்கக் கடவர்.

(க - ரை.) பகல் முதலான காலங்களில் ஏகதந்தர் முதலானோர் காக்கக்கடவர்.

(வி-ரை.) ஏகதந்தர் - ஒற்றைக்கொம்பர். விக்கினகிருது-தன்னை வணங்காதவர்க்கு இடையூறுகளை யுண்டாக்குவோர். பாசாங்குசர் - பாசம் அங்குசம் என்பவற்றை யுடையவர்; அங்குசம் - தோட்டி. (எ)

மதிஞானந் தவந்தான மானமொளி புகழ்குலம்வண் சரீர முற்றும், பதிவான தனந்தானி யங்கிரக மனைவிமைந்தர் பயினட் பாதிக், கதியாவுங் கலந்துசர்வா யுதர்காக்க காமர்

பவுத் திரர்முன் னுன, விதியாருஞ் சுற்றமெலா மயூரேச ரெஞ்ஞான்றும் விரும்பிக் காக்க.

(ப-ரை.) மதி ஞானம் - மதித்தற்குரிய ஞானம், தவம்-தவம், தானம் - தானம், மானம் - மானம், ஒளி - தேஜஸு, புகழ் - கீர்த்தி, குலம் - குலம், வண் சரீர முற்றும் - வளமான சரீரமுழுதும், பதிவு ஆன தனம்-நிறைந்த தனம், தானியம்-தானியம், கிரகம்-வீடு, மனைவி மைந்தர் - மனைவி மக்கள், பயில் - பழகுகின்ற, நட்பு ஆதி - சிநேகர் முதலாகிய, கதி யாவும் - எல்லாக் கதிகளிலும், கலந்து - வியாபித்து, சர்வாயுதர் காக்க - சர்வாயுதர் காக்கக்கடவர்; காமர்- அழகாகிய, பவுத் திரர் முன் ஆன - பேரர் முதலாகிய, விதி ஆரும் - ஊழின்படியே வந்து சேர்ந்த, சுற்றம் எல்லாம்-சுற்றத்தாரை யெல்லாம், மயூரேசர் - மயூரேசரானவர், எஞ்ஞான்றும் - எந்நாளும், விரும்பி காக்க - விரும் பிக் காக்கக்கடவர்.

(பொ-ரை.) மதித்தற்குரிய ஞானம், தவம், தானம், மானம், தேஜஸு, கீர்த்தி, குலம், வளமான சரீர முழுதும் நிறைந்த தனம், தானியம், வீடு, மனைவி மக்கள்,பழகுகின்ற சிநேகர் முதலாகிய எல்லாக் கதிகளிலும் வியாபித்து சர்வாயுதர் காக்கக்கடவர்; அழகாகிய பேரர் முதலாகிய ஊழின்படியே வந்துசேர்ந்த சுற்றத்தாரை யெல்லாம் மயூ ரேசரானவர் எந்நாளும் விரும்பிக் காக்கக்கடவர்.

(க-ரை.) மதி ஞான முதலியவற்றை சர்வாயுதர் முதலானோர் காக்கக்கடவர்.

(வி - ரை.) தானம் - கொடை. மானம் - பெருமை. சர்வாயுதர்- எல்லா ஆயுதங்களையு முடையவர். மயூரேசர்-மயில்வாகனத்தை யுடைய வர். தனக்குத் தம்பிக்கும் வேற்றுமை யின்மையால் இவ்வாறு கூறி னர். மயூரம்-மயில். (அ)

வென்றிசீ விதங்கபிலர் காக்ககரி யாதியெலாம் விகடர் காக்க, வென்றிவ்வா றிதுதனைமுக் காலமுமோ திடினும்பா லிடையூ றொன்றும், மொன்றுறா முனிவர்கா ளறிமின்கள் யாரொருவ ரோதி னாலு, மன்றவாங் கவர்தேகம் பிணியற வச் சிரதேக மாகி மன்னும்.

(ப - ரை.) வென்றி - வெற்றியமைந்த, சீவிதம் - சீவிதத்தை, கபிலர் காக்க - கபிலர் காக்கக்கடவர்; கரியாதி எல்லாம்-கரி முதலிய வெல்லாவற்றையும், விகடர் காக்க - விகடர் காக்கக்கடவர்; என்று- என்று, இவ்வாறு - இந்தப்படியே, இதுதனை - இந்தக் கவசத்தை, முக்காலமும் ஓதிடின்-த்ரிகாலத்திலும் படனம்பண்ணினல், நும்பால்- உம்மிடத்து, இடையூறு - துன்பங்கள், ஒன்றும் - ஒன்றுயினும், ஒன்றுறா - சேரமாட்டா; முனிவர்காள் - முனிசிரேஷ்டர்களே! அறிமின்கள் - அறிந்துகொள்ளுங்கள்; யாரொருவர் ஓதினலும்-யாரொரு வர் படனம் பண்ணினலும், மன்ற - நிச்சயமாக, ஆங்கு அவர் தேகம்- அவர்களுடைய சரீரமானது, பிணி அற-நோயொழிய, வச்சிர தேகம் ஆகி - வஜ்ர சரீரமாகி, மன்னும் - நிலைபெறும்.

(பொ-ரை.) வெற்றியமைந்த சீவிதத்தை கபிலர் காக்கக்கடவர்; கரி முதலிய வெல்லாவற்றையும் விகடர் காக்கக்கடவர்: என்று இந்தப் படியே இந்தக் கவசத்தை த்ரிகாலத்திலும் படனம் பண்ணினல் உம் மிடத்துத் துன்பங்கள் ஒன்றுயினும் சேரமாட்டா; முனிசிரேஷ்டர் களே! அறிந்துகொள்ளுங்கள்; யாரொருவர் படனம் பண்ணினலும் நிச்சயமாக அவர்களுடைய சரீரமானது நோயொழிய வஜ்ர சரீரமாகி நிலைபெறும்.

(க - ரை.) சீவித முதலியவற்றை கபிலர் முதலானோர் காக்கக் கடவர்; இந்தக் கவசத்தைப் பாராயணம் செய்வோர் பிணி முதலிய துன்பங்க ளொழிந்து வஜ்ர சரீரிகளாய் நிலைபெற்று வாழ்வார்.

(வி-ரை.) சீவிதம் - உயிர்வாழ்க்கை (ஆயுள்). கபிலர்-கபில நிற முள்ளவர்; கபிலம்-கருமை கலந்த பொன்னிறம். கரி-நஞ்சு. விகடர் - சரீரத்துக்கு மாறுபட்ட முகத்தை யுடையவர். முக்காலம் - இறந்த காலம் நிகழ்காலம் எதிர்காலம் என்னும் மூன்று காலங்கள். நம்பால் என்பதில் பால் ஏழனுருபு. (க)

---

பத்தியுடனே இந்தக் கவசத்தைப் பாராயணஞ் செய்பவர்களுக் குப் பிணியும், வறுமையும், பேய் பூதங்களா லுண்டாகின்ற பல துன் பங்களும், கவலைகளும், பாவ முதலியவைகளும் நீங்கும். அன்றியும், பெருஞ்செல்வமும், தீர்க்காயுளும், களத்திர புத்திர மித்திராதிகளும் உண்டாகும். அன்றியும், யாத்திரையிலே இதைச் செபித்தால், சகல விக்கினமும் போய்ப் பயன்களெல்லாம் கைகூடும். யுத்தத்திலே இத னைச் சொன்னால் ஜயமுண்டாகும். இருபத்தொருநாள் நாளொன் றுக்கு ஏழுமுறை தோத்திரஞ் செய்தால், மாரண நீங்குவதன்றி உச்சாடணம் ஆகருஷணம் ஸ்தம்பன முதலியவைகள் பயனுறும். இருபத்தொருநாள் நித்தியம் இருபத்தொருதரஞ் செபித்தால், சிறை யிருப்பு விடுதலாவதுமன்றி, அரசர்களுடைய நிஷ்டூரமு நீங்கும். அரசனைக் காணப்போகும்போது பத்தியினால் மூன்றுதரம் இதை ஓதினால் அவன் வசப்படுவான். இதைப் படித்தாலும், ஒருவர் சொல் லக் கேட்டாலும், பூசித்தாலும் எப்படிப்பட்ட துன்பமும் நீங்கும்.

விநாயக கவசம் மூலமும் உரையும்

முற்றுப்பெற்றது.



சிவமயம்.

# சிவகவசம்

## மூலமும் உரையும்.

[இந்தக் கவசம் பத்திராயுவென்னும் இராஜகுமாரனுக்கு விடப முனி அருளிச்செய்ததென்று நைமிசாரணிய முனிவருக்குச் சூதமகா முனிவர் அநுக்கிரகித்தது.]

பங்கயத் தவிசின் மேவி யிருந்துடற் பற்று நீக்கி
யங்குநற் பூத சுத்தி யடைவுடன் செய்த பின்னர்க்
கங்கையைத் தரித்த சென்னிக் கற்பக தருவைச் செம்பொற்
கொங்கைவெற் பனைய பச்சைக் கொடியொடு முளத்தில்
[வைத்தே.

(பதவுரை.) பங்கயத் தவிசின் மேவி இருந்து - பத்மாஸநத்திற் பொருந்தியிருந்து, உடல் பற்று நீக்கி - உடற்பற்றை யொழித்து, அங்கு - அவ்விடத்தில், நல்-நன்மையாகிய, பூத சுத்தி-பூத சுத்தியை, அடைவுடன் செய்த பின்னர் - கிரமமாகச் செய்தபின்பு, கங்கையை-கங்காநதியை, தரித்த - தாங்கிய, சென்னி - திருமுடியையுடைய, கற்பகத் தருவை-கற்பக விருட்சத்தை, செம்பொன் வெற்பு அனைய-செம்பொன் மலைபோன்ற, கொங்கை - தனங்களையுடைய, பச்சைக் கொடியோடும் - பச்சைக் கொடிபோல்பவளாகிய உமாதேவியோடும், உள்ளத்தில் வைத்து - மனத்தில் வைத்து.

(பொழிப்புரை.) பத்மாஸநத்திற் பொருந்தியிருந்து உடற்பற்றை யொழித்து அவ்விடத்தில் நன்மையாகிய பூதசுத்தியைக் கிரம

மாகச் செய்தபின்பு கங்காநதியைத் தாங்கிய திருமுடியையுடைய கற்பகவிருட்சத்தைச் செம்பொன் மலைபோன்ற தனங்களையுடைய பச்சைக் கொடிபோல்பவளாகிய உமாதேவியோடும் மனத்தில் வைத்து.

(கருத்துரை.) பத்மாஸநத்தி லிருந்துகொண்டு பூதசுத்தி முதலியவற்றைச் செய்தபின்பு, கங்காதரராகிய சிவபெருமானையும் பார்வதி தேவியாரையும் மனத்தில் எழுந்தருளச் செய்துகொண்டு.

(விசேடவுரை.) சிவகவசம் - சிவஸ்தோத்ரமாகிய கவசம் என விரியும். கவசம் - சட்டை; இரும்பு முதலியவற்றாற் செய்யப்பட்ட கவசமானது பகைவர் பிரயோகிக்கிற அம்பு முதலியவை உடம்பின் மேற்பட்டு வருத்தாதபடி செய்வதுபோல, இந்தச் சிவகவசமும் உடம்புயிர்களுக்கு நேரிடுந் துன்பங்களைத் தடுத்துக் காக்கவல்லதாதலால் இதற்குச் சிவகவசம் எனப் பெயராயிற்று. சிவன்-மங்களகரன். பங்கயம் - தாமரை; இதற்குச் சேற்றில் முளைப்பதென்பது பொருள். தவிசு - ஆசநம். பத்மாசநம் - இருதொடைமேலும் இரண்டுள்ளங் காலையுமாறித் தோன்றவைத்திருத்தல். உடற்பற்று - தேஹாபிமாநம். பூதசுத்தி - பஞ்சசுத்தியி லொன்று. 'கங்கையைத் தரித்த சென்னிக் கற்பகத்தரு' என்றது சிவபெருமானை. 'செம்பொற் கொங்கை வெற்பனைய பச்சைக்கொடி' என்றது உமாதேவியை. கற்பகதரு, பச்சைக்கொடி என்பன உவமையாகுபெயர்கள். (௧)

அகிலநா யகனுய் ஞான வானந்த ரூபி யாகித்
துகடரு மணுவாய் வெற்பின் றோற்றமா யுயிரை யெல்லாந்
தகவுட னவனி யாகித் தரிப்பவ னெம்மை யிந்த
மகிதல மதனிற் றீமை மருவிடா தருளிற் காக்க.

(ப - ரை.) அகிலம் நாயகன் ஆய்-லோகநாதனாகி, ஞான ஆநந்த ரூபி ஆகி - ஞாநாநந்த வுருவினனாகி, துகள் தரும் அணுவாய்-தூளாகிய அணுரூபமாகி, வெற்பின் தோற்றம் ஆய் - மலையின் காட்சியை

யுடையதாகி, உயிரை எல்லாம் - எல்லா வுயிர்களையும், தகவுடன் அவனி ஆகி தரிப்பவன் - தகுதியோடு பூமியாகித் தாங்குவோன், எம்மை - எங்களை, இந்த மகிதலம் அதனில் - இந்தப் பூவுலகில், தீமை மருவிடாது - தீங்குகள் அணுகாதபடி, அருளின் - தன் திருவருளால், காக்க - காக்கக்கடவர்.

(போ - ரை.) லோகநாதனாகி, ஞானாநந்த வுருவினனாகி, அகளாகிய அணுரூபமாகி, மலையின் காட்சியை யுடையதாகி, எல்லா வுயிர்களையும் தகுதியோடு பூமியாகித் தாங்குவோன் எங்களை இந்தப் பூவுலகில் தீங்குகள் அணுகாதபடி தன் திருவருளால் காக்கக்கடவர்.

(க - ரை.) லோகநாதனாய் ஞானாநந்தரூபியாயிருக்கிற பரமேச்சுரர் இந்தப் பூலோகத்தில் ஒரு தீமையும் அணுகாதபடி எங்களைக் காக்கக்கடவர்.

(வி - ரை.) அகிலம் - உலகம். ஞானம் - அறிவு. ஆநந்தம் - இன்பம். தகவு - தகுதி. அவநி - பூமி; அவநி யென்பதற்கு ப்ரஜைகளை ரக்ஷிப்பது என்றும், அரசர்களால் காக்கப்படுவது என்றும் பொருள் கூறுவர் வடநூலார். தாங்குதல் - சுமத்தல். சிறுமை பெருமைகட் கிருவரம்பா யிருப்பவனாதலால் 'அகடரு மணுவாய் வெற்பின் றோற்றமாய்' என்றார். மகி - பூமி, இது மஹீ யென்னும் வடசொற்றிரிபு; இதற்கு பூஜிக்கப்படுவது என்பது பொருளென்பர் வடநூலார். அருளின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்றாவதன் கருவிப் பொருளில் வந்தது. (உ)

குரைபுன லுருவங் கொண்டு சூழ்தொறும் பயன்க ணல்கித்
தரையிடை யுயிர்கள் யாவுந் தளர்ந்திடா வண்ணங் காப்போ
னிரைநிரை முகில்க ளீண்டி நெடுவரை முகட்டிற் பெய்யும்
விரைபுன லதனுள் வீழ்ந்து விளிந்திடா தெம்மைக் காக்க.

(ப-ரை.) குரை-ஒலிக்கின்ற, புனல் உருவம் கொண்டு-நீருருவு கொண்டு, கூழ்தொறும் - பயிர்கள்தோறும், பயன்கள் நல்கி - (அவ் வவற்றிற்குரிய) பயன்களைக் கொடுத்து, தரையிடை - பூமியிலிருக் கிற, உயிர்கள் யாவும் - எல்லா வுயிர்களும், தளர்ந்திடா வண்ணம் - தளராதபடி, காப்போன் - காத்தருள்வோன், நிரை நிரை - வரிசை வரிசையாய், முகில்கள் - மேகங்கள், ஈண்டி - நெருங்கி, நெடுவரை முகட்டில் - நெடிய மலையுச்சியில், பெய்யும் - பெய்கிற, விரை புனல் அதனுள் வீழ்ந்து - வேகத்தையுடைய நீரில் விழுந்து, விளிந்திடாது- இறந்துபோகாமல், எம்மை காக்க - எங்களைக் காக்கக்கடவர்.

(பொ - ரை.) ஒலிக்கின்ற நீருருவுகொண்டு பயிர்கள்தோறும் (அவ்வவற்றிற்குரிய) பயன்களைக்கொடுத்துப் பூமியிலிருக்கிற எல்லா வுயிர்களும் தளராதபடி காத்தருள்வோன்: வரிசைவரிசையாய் மேகங் கள் நெருங்கி நெடிய மலையுச்சியில் பெய்கிற வேகத்தையுடைய நீரில் விழுந்து இறந்துபோகாமல் எங்களைக் காக்கக்கடவர்.

(கு - ரை.) நீருருக்கொண்டு இவ்வுலகிற் பயிர்களுக் கெல்லாம் பயன் றந்து எல்லா வுயிர்களையுங் காத்தருள்வோன்: மலையருவி நீரில் வீழ்ந்திறவாதபடி எங்களைக் காக்கக்கடவர்.

(வி - ரை.) கூழ் - பயிர். நல்குதல் - கொடுத்தல். தரை - தரா என்னும் வடசொல்லீறு திரிந்தது. முகில்-மேகம். ஈண்டல்-நெருங் கல். விரைதல் - வேகமாய்ச் செல்லுதல். விளிதல் - இறத்தல். (ந)

கடையுகந் தன்னி லெல்லா வுலகமுங் கடவுட் டீயா
னடலைசெய் தமலை தாள மறைதர நடிக்கு மீச
னிடைநெறி வளைதா பத்தி லெறிதரு சூறைக் காற்றிற்
றடைபடா தெம்மை யிந்தத் தடங்கட லுலகிற் காக்க.

(ப - ரை.) கடையுகம் தன்னில்-யுகமுடிவில், எல்லா உலகமும் - எல்லா வுலகங்களையும், கடவுள் தீயால் - தெய்வத் தீயினால், அடலை

செய்து - சாம்பலாக்கி, அமலை - உமாதேவி, தாளம் அறைதர-தாளம் கொட்ட, நடிக்கும் - நடிக்கின்ற, ஈசன்-ஈச்சுரன், இடைநெறி-இடை வழியில், விளை - விளைந்துகொண்ட, தாபத்தில் - தாபத்தியாலும், எரிதரு - எரிகின்ற, சூறைக்காற்றின் - சுழற்காற்றினாலும், தடைபடாது-தடைபடாமல், எம்மை - எங்களை, இந்த-இந்த, தடம் கடல் - பெரிய கடல் சூழ்ந்த, உலகில் காக்க-உலகத்திற் காக்கக்கடவர்.

(பொ - ரை.) யுகமுடிவில் எல்லா வுலகங்களையும் தெய்வத்தீயினால் சாம்பலாக்கி, உமாதேவி தாளம் கொட்ட நடிக்கின்ற ஈச்சுரன், இடைவழியில் விளைந்துகொண்ட தாபத்தியாலும் எரிகின்ற சுழற்காற்றினாலும் தடைபடாமல், எங்களை இந்தப் பெரிய கடல் சூழ்ந்த உலகத்திற் காக்கக்கடவர்.

(க - ரை.) யுகாந்தத்தில் எல்லாப் பொருள்களையும் சாம்பலாக்கிப் பெருமயானத்தில் நடிக்கிற சர்வேச்சுரர், மூத்தாபத்தியால் வருந்தாது எங்களைக் காக்கக்கடவர்.

(வி - ரை.) யுகக்கடையென்பது கடையுகமெனச் சொன்னிலை மாறி நின்றது. அடலை - சாம்பல். அமலை - பரிசுத்தை. நடித்தல் - கூத்தாடல், தாபம் - மூத்தாபம்; அவை: ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்பன; இவை முறையே தன்னால் வருவனவும், பிறவுயிர்களால் வருவனவும், தெய்வத்தால் வருவனவுமாகிய துக்கங்கள். தடங்கடலுலகு என்றது இந்த மத்யலோகத்தை. (சு)

தூயகண் மூன்றி னோடு சுடரும்பொன் வதன நான்கும்
பாயுமான் மழுவி னோடு பகர்வர தாப யங்கண்
மேயதிண் புயங்க ணான்கு மிளிருமின் னனைய தேசு
மாயதற் புருட னெம்மைக் குணதிசை யதனிற் காக்க.

(ப-ரை.) தூய - பரிசுத்தமாகிய, கண் மூன்றினோடு-மூன்று கண்களோடும், சுடரும் - ஒளி செய்கிற, பொன் - அழகாகிய, வதனம்

நான்கும் - நான்கு முகங்களும், பாயு மான் மழுவினோடு-பாய்கின்ற மானினோடும் மழுவினோடும், பகர் - சொல்லப்பட்ட, வரத அபயங்கள் மேய - வரதாபயங்களோடு கூடின, திண் புயங்கள் நான்கும் - உறுதியாகிய நான்கு தோள்களும், மிளிரும் - விளங்குகிற, மின் அனைய - மின்னலையொத்த, தேசும்-ஒளியும், ஆய-உடையவராகிய, தற்புருடன்-தத்புருஷா னவர், குணதிசை அதனில்-கீழ்த்திசையில், எம்மைக் காக்க - எங்களைக் காக்கக்கடவர்.

(பொ-ரை.) பரிசுத்தமாகிய மூன்று கண்களோடும் ஒளி செய்கிற அழகாகிய நான்கு முகங்களும், பாய்கின்ற மானினோடும் மழுவினோடும் சொல்லப்பட்ட வரதாபயங்களோடு கூடின உறுதியாகிய நான்கு தோள்களும் விளங்குகிற மின்னலையொத்த ஒளியும் உடையவனாகிய தத்புருஷரானவர் கீழ்த்திசையில் எங்களைக் காக்கக்கடவர்.

(க-ரை.) த்ரிணேத்ர முதலியவற்றை யுடையவராகிய தத்புருஷரானவர் எங்களைக் கீழ்த்திசையிற் காக்கக்கடவர்.

(வி-ரை.) 'தூய கண் மூன்று' என்றது சோம சூரியாக்கினிகளாகிய மூன்று கண்களை. அபயம் - அஞ்சவேண்டாம் என்னுங் கை. வரதம் - ரக்ஷிக்குங் கை. தற்புருடன் - தற்புருடம் என்னும் முகத்தை யுடைய சிவபெருமான். குணக்கு-கிழக்கு. (௭)

மான்மழு சூலந் தோட்டி வனைதரு மக்க மாலை
கூன்மலி யங்கு சந்தீத் தமருகங் கொண்ட செங்கை
நான்முக முக்க ணீல நள்ளிருள் வருணங் கொண்டே
டான்வரு மகோர மூர்த்தி தென்றிசை யதனிற் காக்க.

(ப - ரை ) மான் - மானும், மழு - மழுவும், சூலம் - சூலமும், தோட்டி - தோட்டியும், வனைதரும் - அலங்கரிக்கப்பெற்ற, அக்கமாலை - அக்கமாலையும், கூன் மலி அங்குசம்-வளைவு பொருந்திய அங்குசமும், தீ - எரியும், தமருகம் - தமருகமும், (ஆகிய இவை யெல்லா

வற்றையும்) கொண்ட - தரித்த, செம் கை - செவந்த திருக்கைகளையும், நான்முகம் - நான்கு முகங்களையும், முக்கண் - மூன்று கண்களையும், நீலம் நன் இருள் வருணம்-நீலமாகிய நடுராத்திரியிருள்நிறத்தையும், கொண்டு - கொண்டு, ஆன் வரும் - இடபத்தின்மேலேறிவருகிற, அகோர மூர்த்தி-அகோரமூர்த்தியானவர், தென்திசையதனில் - தென்றிசையில், காக்க - (என்னைக்) காக்கக்கடவர்.

(பொ - ரை.) மானும், மழுவும், சூலமும், தோட்டியும், அலங்கரிக்கப்பெற்ற அக்கமாலையும், வளைவு பொருந்திய அங்குசமும், எரியும், தமருகமும் (ஆகிய இவை யெல்லாவற்றையும்) தரித்த செவந்த திருக்கைகளையும், நான்கு முகங்களையும், மூன்று கண்களையும், நீலமாகிய நடுராத்திரியிருள் நிறத்தையுங் கொண்டு இடபத்தின்மேலேறி வருகின்ற அகோரமூர்த்தியானவர் தென்றிசையில் (என்னைக்) காக்கக்கடவர்.

(க - ரை.) மான் மழு முதலியவற்றை யுடையராய் இடபவாகனத்தி லேறிவருகிற அகோரமூர்த்தியானவர், தென்றிசையில் என்னைக் காக்கக்கடவர்.

(வி - ரை.) மழு - பரசாயுதம், இது எரியுருவாயிருப்பது. தோட்டி - துறடு. வனைதல் - அலங்கரித்தல். அக்கமாலை - உருத்திராக்கமாலை, அன்றி சங்குமணி மாலையுமாம். தமருகம் - உடுக்கை. ஆன் - இடபம். அகோரமூர்த்தி - அகோரம் என்று முகத்தையுடைய சிவபெருமான். (சு)

திவண்மறி யக்க மாலை செங்கையோ ரிரண்டுந் தாங்க
வவிர்தரு மிரண்டு செங்கை வரதத்தோ டபயந் தாங்கக்
கவினிறை வதன நான்குங் கண்ணொரு மூன்றுங் காட்டுந்
தவளமா மேனிச் சத்தியோ சாதன்மேற் றிசையிற் காக்க.

(ப-ரை.) திவள் - மெலிந்த, மறி - மான்கன்று, அக்கமாலை - அக்கமாலை, (இவற்றை) செம் கை ஓர் இரண்டும் தாங்க - ஒரிரண்டு

சிவந்த கைகளுந் தாங்கவும், அவிர்தரும் - பிரகாசிக்கிற, இரண்டு செம் கை - இரண்டு சிவந்த கைகள், வரதத்தோடு அபயம் தாங்க - வரதத்துடனே அபயத்தையும் தாங்கவும், கவின் நிறை-அழகு நிறைந்த, வதனம் நான்கும்-நான்கு திருமுகங்களையும், கண் ஒரு மூன்றும் - ஒரு மூன்று கண்களையும், காட்டும்-காட்டுகிற, மா-பெருமை பொருந்திய, தவளம் - வெண்மையாகிய, மேனி - திருமேனியையுடைய, சத்தியோசாதன் - சத்யோஜாதர், மேல்திசையில் காக்க - மேற்றிசையில் (என்னைக்) காக்கக்கடவர்.

(பொ - ரை.) மெலிந்த மான்கன்று அக்கமாலை (இவற்றை) இரண்டு சிவந்த கைகளும் தாங்கவும், பிரகாசிக்கின்ற இரண்டு சிவந்த கைகள் வரதத்துடனே அபயத்தையும் தாங்கவும், அழகு நிறைந்த நான்கு திருமுகங்களையும் ஒரு மூன்று கண்களையும் காட்டுகிற பெருமை பொருந்திய வெண்மையாகிய மேனியையுடைய சத்யோஜாதர் மேற்றிசையில் (என்னைக்) காக்கக்கடவர்.

(க-ரை.) மான்கன்று அக்கமாலை அபயவரதம் முதலியவற்றை யுடைய தவளவண்ணராகிய சத்தியோஜாதர் மேற்றிசையில் என்னைக் காக்கக்கடவர்.

(வி-ரை.) திவளல்-மெலிதல், அதாவது இளையதாதல். கவின் - அழகு. சத்தியோசாதன் - சத்தியோசாதம் என்னு முகத்தையுடைய சிவபெருமான். (எ)

கறைசெழு மழுவு மானு மபயமுங் கண்ணி னும
மறைதரு தொடையுஞ் செய்ய வங்கைக ணன்கு மேந்திப்
பொறைகொணன் முகத்து முக்கட் பொன்னிற மேனி யோடு
மறைபுகழ் வாம தேவன் வடதிசை யதனிற் காக்க.

(ப - ரை.) கறை செழு மழுவும் - உதிரம் தோய்ந்த மழுவும், மானும் - மானும், அபயமும்-அபயமும், கண்ணின்-நினைக்குமிடத்து,

நாமம் - திருநாமங்களை, அறைதரு - சொல்லுகிற, தொடையும்-ஜபமாலிகையும், செய்ய - சிவந்த, அம் கைகள் நான்கும் ஏந்தி - அழகிய கைகள் நான்கையு மேந்தி, பொறை கொள் - பொறுமையைக் கொண்ட, நால் முகத்தும் - நான்கு முகங்களையும், முக்கண்-மூன்று கண்களையும், பொன் நிறம் மேனியோடு - பொன்னிறத்தையுடைய திருமேனியோடு, மறை புகழ் - வேதங்களால் புகழப்பட்ட, வாமதேவன் - வாமதேவரானவர், வடதிசையதனில் காக்க - வடதிசையில் (என்னைக்) காக்கக்கடவர்.

(பொ - ரை.) உதிரந் தோய்ந்த மழுவும், மானும், அபயமும், நினைக்குமிடத்துத் திருநாமங்களைச் சொல்லுகிற ஜபமாலிகையும் சிவந்த அழகிய கைகள் நான்கையு மேந்திப் பொறுமையைக் கொண்ட நான்கு முகங்களையும், மூன்று கண்களையும், பொன்னிறத்தையுடைய திருமேனியோடு வேதங்களால் புகழப்பட்ட வாமதேவரானவர் வடதிசையில் (என்னைக்) காக்கக்கடவர்.

(க-ரை.) மழு மான் முதலியவற்றையுடைய வாமதேவரானவர் வடதிசையில் என்னைக் காக்கக்கடவர்.

(வி - ரை.) கண்ணினுமம் அறைதரு தொடை - உருத்திராக்க மாலை யெனினுமாம்; உருத்திராக்க மாலைக்குக் கண்மணிமாலை யென்றும் பெயர் கூறுவர். தொடை-மாலை. வாமதேவன் - வாமதேவம் என்னு முகத்தையுடைய சிவபெருமான். (அ)

அங்குசங் கபாலஞ் சூல மணிவா தாப யங்கள்
சங்குமான் பாச மக்கந் தமருகங் கரங்க ளேந்தித்
திங்களிற் றவள மேனி திருமுக மைந்தும் பெற்ற
வெங்களீ சான தேவ னிருவிசும் பெங்குங் காக்க.

(ப-ரை.) அங்குசம்—, கபாலம்—, சூலம்—, அணி - அழகிய, வரத அபயங்கள்—, சங்கு—, மான்—, பாசம்—, அக்கம்-அக்கமாலை,

தமருகம்—, (ஆகிய இவற்றைக்) கரங்கள் ஏந்தி - கைகளி லேந்திக் கொண்டு, திங்களின்-சந்திரன்போல, தவள மேனி-வெண்மையாகிய திருமேனியையும், திரு முகம் ஐந்தும் - ஐந்து திருமுகங்களையும், பெற்ற - படைத்திருக்கிற, எங்கள்-எம்முடைய, ஈசானதேவன்-ஈசான தேவரானவர், இரு-பெரிய, விசும்பு எங்கும் காக்க-ஆகாய முழுதிலும் (எம்மைக்) காக்கக்கடவர்.

(பொ-ரை.) அங்குசம், கபாலம், சூலம், அழகிய வரத அபயங்கள், சங்கு, மான், பாசம், அக்கமாலை, தமருகம் (ஆகிய இவற்றைக்) கைகளி லேந்திக்கொண்டு, சந்திரன்போல வெண்மையாகிய திருமேனியையும், ஐந்துதிருமுகங்களையும்படைத்திருக்கிற எம்முடையஈசான தேவரானவர் பெரிய ஆகாய முழுதிலும் (எம்மைக்) காக்கக்கடவர்.

(க-ரை.) அங்குசம் முதலியவற்றையுடைய ஈசானதேவர் எம்மை ஆகாய முழுதிலுங் காக்கக்கடவர்.

(வி-ரை.) கபாலம் - தலையோடு (பிரமகபாலம்). பாசம் - கயிற்றுருவாயிருப்பதோராயுதம். ஈசானதேவன் - ஈசானம் என்னு முகத்தையுடைய சிவபெருமான். அக்கமாலை - உருத்திராக்கமாலை. (௯)

சந்திர மவுலி சென்னி தனிநுதற் கண்ண னெற்றி
மைந்துறு பகன்கண் டோட்டோன் வரிவிழி யகில நாதன்
கொந்துணர் நாசி வேதங் கூறுவோன் செவிக பாலி
யந்தில்செங் கபோலந் தூப வைம்முகன் வதன முற்றும்.

(ப - ரை) சந்திரமவுலி - சந்திரசேகரர், சென்னி - தலையையும்; தனி நுதற்கண்ணன் - ஒப்பற்ற நெற்றிக்கண்ணர், நெற்றி - நெற்றியையும்; மைந்து உறு - பலம் பொருந்திய, பகன் கண் தொட்டோன் - பகனுடைய கண்ணைப் பிடுங்கினவன், வரி விழி - நீண்ட கண்களையும்; அகிலநாதன் - லோகநாதன், கொந்து உணர் நாசி-பூங்கொத்தின் மணத்தை யறிகிற நாசியையும்; வேதம் கூறுவோன் -

வேதம் சொல்லுவோன், செவி - காதினையும்; கபாலி - கபாலி, செம் கபோலம் - செவந்த கபோலத்தையும்; தூய - பரிசுத்தமாகிய; ஐம் முகன் - ஐந்து திருமுகங்களை யுடையவன், வதனம் முற்றும் - முக முழுதையும்;

(பொ-ரை.) சந்திரசேகரர்: தலையையும், ஒப்பற்ற நெற்றிக்கண் ணர்: நெற்றியையும், பலம் பொருந்திய பகனுடைய கண்ணைப் பிடுங் கினவன்: நீண்ட கண்களையும், லோகநாதன்: பூங்கொத்தின் மணத் தை யறிகிற நாசியையும், வேதம் சொல்லுவோன்: காதினையும், கபாலி: செவந்த கபோலத்தையும், பரிசுத்தமாகிய ஐந்து திருமுகங் களை யுடையவன்: முகமுழுதையும்;

(க-ரை.) சந்திரசேகரர் முதலியோர் தலை முதலியவற்றைக் (காக்கக்கடவர்).

(வி-ரை.) சந்திரமவுலி - பாசுபாணி, அளிகுலவேணி, பல்லவ பாணி என்பனபோல்வதோர் சினையாகுபெயர். பகன்-துவாதசாதித் தரி லொருவன்; இவன் தக்கன் யாகசங்காரகாலத்தில் கண்ணிழந்த வன். தொடுதல்-பிடுங்குதல். கொந்து - பூங்கொத்து. கபோலம் - கன் னம். அந்தில் - அசையிடைச்சொல். (௧௦)

வளமறை பயிலு நாவ னுமணி நீல கண்டன்
களமடு பினாக பாணி கையிணை தரும வாகு
இளர்புயந் தக்கன் யாகங் கெடுத்தவன் மார்பு தூய
வொளிதரு மேரு வில்லி யுதரமன் மதனைக் காய்ந்தோன்.

(ப-ரை.) வளம் - வளமாகிய, மறை பயிலும்-வேதங்கள் பயில் கிற, நாவன் - நாவினையுடையவன், நா - நாவினையும்; மணி-நீலமணி போன்ற, நீலகண்டன் - நீலகண்டனானவன், களம் - கழுத்தையும்; அடு - பகைவரை வெல்லுகிற, பினாகபாணி - பினாகபாணியானவன், கையிணை - இரண்டு கைகளையும்; தருமவாகு - தர்மவாகுவானவன்,

ளர் புயம்-விளங்குகின்ற புயத்தையும்; தக்கன் யாகம் கெடுத்தவன்-தக்ஷயஜ்ஞத்வம்ஸகனானவன், மார்பு - மார்பையும்; தூய ஒளி தரு - பரிசுத்தமாகிய வொளியைத் தருகிற, மேருவில்லி - மேருவில்லியானவன், உதரம் - வயிற்றையும்; மன்மதனை காய்ந்தோன்-காமதகனனவன்,

(போ-ரை.) வளமாகிய வேதங்கள் பயில்கிற நாவினை யுடையவன்: நாவினையும், நீலமணிபோன்ற நீலகண்டனானவன்: கழுத்தையும், பகைவரை வெல்லுகிற பிநாகபாணியானவன்: இரண்டு கைகளையும், தர்மவாகுவானவன்: விளங்குகின்ற புயத்தையும், தக்ஷயஜ்ஞத்வம்ஸகனானவன்: மார்பையும், பரிசுத்தமாகிய வொளியைத் தருகிற மேருவில்லியானவன்: வயிற்றையும், காமதகனனானவன்;

(க-ரை.) வளமறை பயிலு நாவன் முதலியோர் நா முதலியவற்றைக் (காக்கக்கடவர்).

(வி-ரை.) வேதம் பயிலு நாவனாதலால் 'வளமறை பயிலு நாவன்' என்றும், நீலமணிபோலுந் திருமிடற்றை யுடையவனாதலால் 'மணி நீலகண்டன்' என்றும், பிநாகம் என்னும் வில்லைக் கையிலுடையவனாதலால் 'பிநாகபாணி' என்றும், தருமமே புயமாக வுடையவனாதலால் 'தருமவாகு' என்றும், தக்ஷயஜ்ஞத்வம்ஸகனாதலால் 'தக்கன் யாகம் கெடுத்தவன்' என்றும், த்ரிபுரதஹந காலத்தில் மேருமலையை வில்லாகக் கொண்டவனாதலால் 'மேருவில்லி' என்றும், காமதஹநனாதலால் 'மன்மதனைக் காய்ந்தோன்' என்றும் கூறினர். வாகு-பாஹு என்னும் வடசொற்றிரிபு. நீலகண்டன், பிநாகபாணி, தர்மபாஹு என்பன வடசொற்கள். களம் என்பதும் உதரம் என்பனவும் அவை. மன்மதன் என்பதற்கு, புத்தியைக் கலக்கிறவன் எனப் பொருள் கூறுவர் வடநூலார். (கக)

இடையிப முகத்தோன் றாதை யுந்திகம் மீசன் மன்னும்
புடைவள ரரைகு பேர மித்திரன் பொருவில் வாமம்




படர்சக தீசன் சானு பாய்தரு மிடப கேது
மிடைதரு கணைக்கா லெந்தை விமலன்செம் பாதங் காக்க.

(ப-ரை.) இடை - இடையையும்; இப முகத்தோன் தாதை - யானைமுகவனுக்குப் பிதாவானவன், உந்தி - நாபியையும்; நம் ஈசன் - நம்முடைய ஈசானனவன், மன்னும்-நிலைபெற்ற, புடை வளர் அரை - பக்கத்தில் வளர்கின்ற அரையையும்; குபேர மித்திரன் - குபேர மித்திரனவன், பொருவு இல் வாமம்-ஒப்பற்ற வாமபாகத்தையும்; படர் - எங்கும் வியாபித்த, சகதீசன் - ஜகதீசனனவன், சானு - முழங்கால்களையும்; பாய் தரும் இடபகேது - பாயாநின்ற இடபகேதுவானவன், மிடை தரு கணைக்கால் - நெருங்கிய கணைக்கால்களையும்; எந்தை விமலன் - எமது தந்தையாகிய விமலனனவன், செம் பாதம் - செவந்த பாதங்களையும்; காக்க - காக்கக்கடவர்.

(பொ-ரை.) இடையையும், யானைமுகவனுக்குப் பிதாவானவன்: நாபியையும், நம்முடைய ஈசானனவன்: நிலைபெற்ற பக்கத்தில் வளர்கின்ற அரையையும், குபேரமித்திரனனவன்: ஒப்பற்ற வாம பாகத்தையும், எங்கும் வியாபித்த ஜகதீசனனவன்: முழங்கால்களை களையும், பாயாநின்ற இடபகேதுவானவன்: நெருங்கிய கணைக்கால் களையும், எமது தந்தையாகிய விமலனனவன்: செவந்த பாதங்களையும், காக்கக்கடவர்.

(க-ரை.) மன்மதனைக் காய்ந்தோன் முதலானவர்கள், இடை முதலியவற்றைக் காக்கக்கடவர்.

(வி-ரை.) சந்திரமௌலி யென்னும் பாட்டுமுதல் இந்தப் பாட்டினளவும் ஒரு தொடராய் ஒரு வினைகொண்டு முடிதலால் குளகம் எனப்படும்; "குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்" என்பது விதி. இபம்-யானை. குபேர மித்திரன்-குபேரனுக்கு சிநேகன். இடப கேது - ருஷபத்வஜத்தை யுடையவன். விமலன்-மலரஹிதன். (கஉ)

வருபகன் முதல்யா மத்து மகேசன்பின் னிரண்டாம் யாமம்
பொருவறு வாம தேவன் புகன்றிடு மூன்றும் யாமஞ்
செருமலி மழுவா ளங்கைத் திரியம்பக னாலாம் யாமம்
பெருவலி யிடப வூர்தி பிணியற வினிது காக்க.

(ப-ரை) வரு பகல்-வருகிற பகற்காலத்தின், முதல் யாமத்து-முதற்சாமத்தில், மகேசன் - மஹேசனும்; பின் இரண்டாம் யாமம் - பின் இரண்டாஞ் சாமத்தில், பொருவு அற - ஒப்பற்ற, வாமதேவன்-வாமதேவனும்; புகன்றிடு - சொல்லப்படுகிற, மூன்றும் யாமம்-மூன்றுஞ் சாமத்தில், செரு மலி - போர்த்தொழில் மிகுந்த, மழு வாள் - மழுவையும் வாளையுந் தாங்கிய, அங்கை - அங்கையினையுடைய, திரியம்பகன் - திரியம்பகனும்; நாலாம் யாமம் - நாலாஞ் சாமத்தில், பெருவலி-பெருவலியையுடைய, இடபவூர்தி-இடபவூர்தியும்; பிணி அற-நோயற, இனிது காக்க - இனிதாகக் காக்கக்கடவர்.

(பொ-ரை.) வருகிற பகற்காலத்தின் முதற்சாமத்தில் மஹேசனும், பின் இரண்டாஞ் சாமத்தில் ஒப்பற்ற வாமதேவனும், சொல்லப்படுகிற மூன்றுஞ் சாமத்தில் போர்த்தொழில் மிகுந்த மழுவையும் வாளையுந் தாங்கிய அங்கையினையுடைய திரியம்பகனும், நாலாஞ் சாமத்தில் பெருவலியையுடைய இடபவூர்தியும் நோயற இனிதாகக் காக்கக்கடவர்.

(க-ரை.) ஒரு பகற்காலத்தின் முதற்சாம முதலியவைகளில் மகேசன் முதலானோர் காக்கக்கடவர்.

(வி-ரை.) மகேசன் - பெருஞ் செல்வத்தை யுடையவன். வாமதேவன் - மேலான தேவன்; இதற்கு இடப்பக்கத்தில் தேவியை யுடையவன் என்பதும் ஒரு பொருள். த்ரியம்பகன்-மூன்று கண்களை யுடையவன்; இதற்கு மூன்றுலகங்களுக்குந் தந்தையென்பதும் ஒரு பொருள். இடபவூர்தி - இடபவாகனன். செரு - போர். (கங)

கங்குலின் முதல்யா மத்துக் கலைமதி முடித்தோன் காக்க
தங்கிய விரண்டாம் யாமஞ் சானவி தரித்தோன் காக்க
பொங்கிய மூன்றும் யாமம் புரிசடை யண்ணல் காக்க
பங்கமி னலாம் யாமங் கௌரிதன் பதியே காக்க.

(ப-ரை.) கங்குலின் - இராக்காலத்தின், முதல் யாமத்து-முதற் சாமத்தில், கலைமதி முடித்தோன் காக்க - சந்திரசேகரன் காக்கக்கடவன்; தங்கிய இரண்டாம் யாமம் - தங்கிய இரண்டாஞ் சாமத்தில், சானவி தரித்தோன் காக்க - கங்காதரன் காக்கக்கடவன்; பொங்கிய மூன்றும் யாமம் - விளங்கிய மூன்றுஞ் சாமத்தில், புரிசடை அண்ணல் காக்க - சடாதரன் காக்கக்கடவர்; பங்கம் இல் - பழுதில்லாத, நாலாம் யாமம் - நாலாஞ் சாமத்தில், கௌரிதன்பதி காக்க - கௌரீசர் காக்கக்கடவர்.

(பொ-ரை.) இராக்காலத்தின் முதற்சாமத்தில் சந்திரசேகரன் காக்கக்கடவன்; தங்கிய இரண்டாஞ் சாமத்தில் கங்காதரன் காக்கக் கடவன்; விளங்கிய மூன்றுஞ் சாமத்தில் சடாதரன் காக்கக்கடவர்; பழுதில்லாத நாலாஞ் சாமத்தில் கௌரீசர் காக்கக்கடவர்.

(க-ரை.) இராக்காலத்தின் முதற்சாம முதலியவற்றில் சந்திர சேகரர் முதலானோர் காக்கக்கடவர்.

(வி-ரை.) கங்குல் - இராக்காலம். கலைமதி - கலையையுடைய சந்திரன். மதி - அமிர்தத்தை யுடையது. சானவி - கங்கை. புரிசடை - கட்டப்பட்ட சடை, அன்றி முறுக்கப்பட்ட சடை. அண்ணல்-பெருமையிற் சிறந்தவன். கௌரி - கௌரவர்ண முடையவள். பதி - நாயகன். (கஎ)

அனைத்துள கால மெல்லா மந்தகற் கடிந்தோ னுள்ளுந்
தனிப்பெரு முதலாய் நின்ற சங்கரன் புறமுந் தானு
வனைப்புறு நடுவுந் தூய பசுபதி மற்று மெங்கு
நினைத்திடற் கரிய நோன்மைச் சதாசிவ நிமலன் காக்க.

(ப-ரை.) அனைத்து உள்ள காலம் எல்லாம் - எல்லாக் காலங்களிலும், அந்தகன் கடிந்தோன் - காலகாலன், உள்ளும் - உட்புறத்திலும்; தனி - ஒப்பற்ற, பெரு முதலாய் நின்ற-பெரிய முதற்பொருளாய் நின்ற, சங்கரன் - சங்கரனுனவன், புறமும் - வெளிப்புறத்திலும்; தாணு - தாணுவானவன், வனப்பு உறு நடுவும் - அழகு மிகுந்த நடுப்பக்கத்திலும்; தூய - பரிசுத்தமாகிய, பசுபதி - பசுபதியானவன், மற்றும் எங்கும் - வேறெல்லாவிடங்களிலும்; நினைத்திடற்கு அரிய-நினைத்தற்கரிதாகிய, நோன்மை - பெருமையினையுடைய, சதாசிவன் நிமலன் - சதாசிவனுகிய நிமலன், காக்க - காக்கக்கடவன்.

(பொ-ரை.) எல்லாக் காலங்களிலும், காலகாலன் உட்புறத்திலும், ஒப்பற்ற பெரிய முதற்பொருளாய் நின்ற சங்கரனுனவன் வெளிப்புறத்திலும், தாணுவானவன் அழகு மிகுந்த நடுப்பக்கத்திலும், பரிசுத்தமாகிய பசுபதியானவன் வேறெல்லாவிடங்களிலும், நினைத்தற்கரிதாகிய பெருமையினையுடைய சதாசிவனுகிய நிமலன் காக்கக்கடவன்.

(க-ரை.) எல்லாக் காலங்களிலும் காலகாலன் முதலானோர் காக்கக்கடவர்.

(வி-ரை.) அந்தகன் - யமன். கடிந்தோன் - வென்றவன். சங்கரன் - சுகத்தை யுண்டாக்குகிறவன். தாணு - ப்ரளயகாலத்திலும் அழியாதிருப்பவன். பசுபதி-ஆன்மாக்களுக்குத் தலைவன். சதாசிவன்-சதானந்தத்தை யுடையவன். (சடு)

நிற்புழிப் புவன நாத னேகுழி நிமல மேனிப்
பொற்பிரம தாதி நாத னிருப்புழிப் பொருவி லாத
வற்புத வேத வேத்திய னருந்துயில் கொள்ளு மாங்கட்
டற்பர சிவன்வ ழிக்குச் சாமள ருத்திரன் காக்க.

(ப - ரை.) நிற்புழி - நிற்குங்காலத்தில், புவனநாதன் - புவனநாதனும்; ஏகுழி-நடக்குங்காலத்தில், நிமலமேனி - நிர்மலமான திரு

மேனியையுடைய, பொன் - அழகிய, பிரமதாதி நாதன் - பிரமதாதி நாதனும்; இருப்புழி - இருக்குங்காலத்தில், பொருவு இலாத - ஒப்பில்லாத, அற்புதம் - ஆச்சரியகரமான, வேதவேத்தியன் - வேதவேத்யனும்; அரு துயில் கொள்ளும் ஆங்கண்-அரிய நித்திரை செய்கிற அக்காலத்தில், தற்பர சிவன் - தற்பரசிவனும்; வழிக்கு - வழிநடையில், சாமள ருத்திரன் - சாமளருத்ரனும், காக்க - காக்கக்கடவர்.

(பொ-ரை.) நிற்குங்காலத்தில் புவனநாதனும், நடக்குங்காலத்தில் நிர்மலமான திருமேனியையுடைய அழகிய பிரமதாதிநாதனும், இருக்குங்காலத்தில் ஒப்பில்லாத ஆச்சரியகரமான வேதவேத்யனும், அரிய நித்திரை செய்கிற அக்காலத்தில் தற்பரசிவனும், வழிநடையில் சாமளருத்ரனும் காக்கக்கடவர்.

(க-ரை.) நிற்குங்கால முதலியவற்றில் பிரமதாதிநாதர் முதலானோர் காக்கக்கடவர் என்பதாம்.

(வி - ரை.) புவனநாதன் - லோகநாயகன். பிரமதாதிநாதன்-ப்ரமத கணங்களுக்குத் தலைவன். வேதவேத்யன் - வேதங்களால் அறிக்கப்படுவோன். தற்பரசிவன் - அந்த மேலான மங்களகரன். சாமளருத்ரன் - பச்சை நிறத்தையுடைய உருத்திரன்; பச்சைநிறம் - இடப்பாகத்திலுள்ள உமாதேவியின் சாயை. ருத்ரன் என்பதற்குப் பகைவரைத் துன்பப்படுத்துவோன் (அழப்பண்ணுவோன்); ஒருகாலத்தில் பிரமனிடத்திற் பிறந்து துக்கித்தவன் (அழுதவன்); எல்லாருடைய துக்கத்தைப் போக்குவோன் என மூன்றுவகையாய்ப் பொருள் கூறுவர் வடநூலார். (கஅ)

மலைமுதற் றுருக்கந் தம்மிற் புராரிகாத் திடுக மன்னுஞ்
சிலைவலி வேட ரூபன் செறிந்தகா னகத்திற் காக்க
கொலையமர் கற்பத் தண்ட கோடிகள் குலுங்க நக்குப்
பலபடி நடிக்கும் வீர பத்திரன் முழுதுங் காக்க,

(ப-ரை.) மலைமுதல்-மலைமுதலாகிய, துருக்கந்தம்மில் - துர்க்கத்தில், புராரி காத்திடுக - புராரியானவர் காக்கக்கடவர்; செறிந்த கானகத்தில்—, மன்னும் - நிலைபெற்ற, சிலை வலி வேடரூபன் - வில் வலியையுடைய வேஷரூபனானவன், காக்க-காக்கக்கடவன்; கொலை அமர் - கொலைத்தொழி லமைந்த, கற்பத்து - யுகமுடிவில், அண்ட கோடிகள் - அண்டகோடிகள் யாவும், குலுங்க குலுங்கும்படி, நக்கு - சிரித்து, பலபடி நடிக்கும் - பலவிதமாய் நடனம் பண்ணுகிற, வீரபத்திரன்-வீரபத்ரனானவன், முழுதும் காக்க-முழுமையும் காக்கக்கடவன்.

(பொ-ரை.) மலைமுதலாகிய துர்க்கத்தில் புராரியானவர் காக்கக்கடவர்; செறிந்த கானகத்தில் நிலைபெற்ற வில்வலியையுடைய வேஷரூபனானவன் காக்கக்கடவன்; கொலைத்தொழி லமைந்த யுக முடிவில் அண்டகோடிகள் யாவும் குலுங்கும்படி சிரித்துப் பலவித மாய் நடனம பண்ணுகிற வீரபத்ரனானவன் முழுமையும் காக்கக்கடவன்.

(க-ரை.) மலையரண் முதலானவைகளில் புராரி முதலானோர் காக்கக்கடவர்.

(வி-ரை.) துருக்கம் - அரண் (காவல்). புராரி - திரிபுரங்களை அழித்தவன். சிலை - வில்; அருச்சுநனோடு போர்செய்த காலத்தில் வேடவுருக்கொண்டு வந்ததனால், 'சிலைவலி வேடரூபன்.' என்றார். வீரபத்திரன் - வீராவேசங்கொண்ட மங்களதேவதை (வீரபத்ரமூர்த்தி).

பல்லுளைப் புரவித் திண்டேர் படுமதக் களிறு பாய்மா
வில்லுடைப் பதாதி தொக்கு மிடைந்திடு மெண்ணில் கோடி
கொல்லியன் மாலை வைவேற் குறுகலர் குறுகுங் காலை
வல்லியோர் பங்கன் செங்கை மழுப்படை துணித்துக் காக்க.

(ப-ரை.) பல் - பலவாகிய, உளை - புறமயிரினையுடைய, புரவி-குதிரைகள்; திண் தேர் - உறுதியாகிய தேர்கள்; படு மதம் களிறு -

உண்டாகிய மதத்தையுடைய யானைகள்; வில் உடை-வில்லையுடைய, பதாதி - பதாதிகள்; தொக்கு - கூடி, மிடைந்திடும்-நெருங்குகின்ற, எண் இல் கோடி - அளவில்லாத கோடிகளாகிய, கொல் - கொல்லுகின்ற, இயல் - இயற்கை யமைந்த, மாலை - மாலை சூடிய, வை வேல்-கூர்மையாகிய வேலாயுதத்தையுடைய, குறுகலர் – பகைவர், குறுகும் காலை - நெருங்குங் காலத்தில், வல்லி - உமாதேவியை, ஓர் பங்கன் - ஒருபங்கி லுடையவனது, செம் கை - செவந்த கையிலுள்ள, மழுப் படை - மழுவாயுதமானது, துணித்து - வெட்டி, காக்க - (எங்களைக்) காக்கக்கடவது.

(பொ-ரை.) பலவாகிய புறமயிரினையுடைய குதிரைகள், உறுதியாகிய தேர்கள், உண்டாகிய மதத்தையுடைய யானைகள், வில்லையுடைய பதாதிகள் கூடி நெருங்குகின்ற அளவில்லாத கோடிகளாகிய கொல்லுகின்ற இயற்கை யமைந்த மாலை சூடிய கூர்மையாகிய வேலாயுதத்தையுடைய பகைவர் நெருங்குங்காலத்தில், உமாதேவியை ஒரு பங்கி லுடையவனது செவந்த கையிலுள்ள மழுவாயுதமானது வெட்டி (எங்களைக்) காக்கக்கடவது.

(க - ரை.) குதிரை முதலிய நால்வகைப் படையுடனே பகைவர் வந்து கிட்டுங்காலத்தில், சிவபெருமானது மழுப்படையானது அவைகளை வெட்டி எங்களைக் காக்கக்கடவது.

(வி - ரை.) பதாதிகள் - காலாட்படைகள். தொக்கு என்பதற்குப் பகுதி தொகு. வல்லி - கொடி; இது உவமையாகுபெயராய் உமாதேவியை யுணர்த்திற்று. (கஅ)

தத்துநீர்ப் புணரி யாடைத் தரணியைச் சுமந்து பானப்
பைத்தலை நெடிய பாந்தட் பஃறலை யனைத்துந் தேய்ந்து
முத்தலை படைத்த தொக்கு மூரிவெங் கனல்கொள் சூலம்
பொய்த்தொழிற் கள்வர் தம்மைப் பொருதழித் தினிதுகாக்க.

(ப - ரை) தத்தும் - தாவுகின்ற, நீர் - நீரையுடைய, புணரி - கடலாகிய, ஆடை - ஆடையைத் தரித்த, தரணியை - பூமியை, சுமந்து - தாங்கி, மானம் - பெருமையுள்ள, பை - படத்தோடு கூடிய, தலை - தலைகளையுடைய, நெடிய - நீண்ட, பாந்தள்-பாம்பினது, பல் தலை அனைத்தும் தேய்ந்து - பல தலைகள் முழுதும் தேய்ந்து, முத்தலை படைத்தது ஒக்கும்-மூன்று தலைகளைப் படைத்திருந்ததை நிகர்க்கிற, மூரி-பலம் பொருந்திய, வெம் கனல் கொள் - வெவ்விய நெருப்பைத் தன்னிடத்தே கொண்டிருக்கிற, சூலம் - சூலாயுதமானது, பொய்த் தொழில் - பொய்த்தொழிலையுடைய, கள்வர்தம்மை - கள்வர்களை, பொருது அழித்து - போர்செய்து வென்று, இனிது காக்க- (எம்மை) இனிதாகக் காக்கக்கடவது.

(போ - ரை.) தாவுகின்ற நீரையுடைய கடலாகிய ஆடையைத் தரித்த பூமியைத் தாங்கி, பெருமையுள்ள படத்தோடுகூடிய தலைகளையுடைய நீண்ட பாம்பினது பல தலைகள் முழுதும் தேய்ந்து மூன்று தலைகளைப் படைத்திருந்ததை நிகர்க்கிற பலம் பொருந்திய வெவ்விய நெருப்பைத் தன்னிடத்தே கொண்டிருக்கிற சூலாயுதமானது பொய்த்தொழிலையுடைய கள்வர்களைப் போர்செய்து வென்று (எம்மை) இனிதாகக் காக்கக்கடவது.

(க - ரை.) சிவபெருமானது சூலப்படையானது கள்வரை வென்று எம்மை இனிதாகக் காக்கக்கடவது.

(வி - ரை.) தரணி - எல்லாப் பொருள்களையுஞ் சுமப்பது. பாந்தள் என்றது ஆதிசேடனை. (கக)

மூடங்குளை முதலா யுள்ள முழுவலிக் கொடிய மாக்க
ளடங்கலும் பிணுகங் கொல்க வென்றிவை யனைத்து முள்ளந்
திடம்பட நினைந்து பாவஞ் செயுஞ்சிவ கவசந் தன்னை
யுடன்படத் தரிப்பை யாணு லுலம்பொரு குவவுத் தோளாய்.

(ப-ரை.) முடங்கு - வளைந்த, உளை முதலாய் உள்ள - புறமயிர் முதலியவற்றையுடைய, முழு வலி - பூர்ண பலமுள்ள, கொடிய மாக்கள் - கொடிய மிருகங்கள், அடங்கலும் - முழுதும், பிநாகம் கொல்க - பிநாகமானது கொல்லக்கடவது, என்று - என்று, இவை அனைத்தும் - இவை யாவும், உள்ளம் திடம்பட நினைந்து - மனம் உறுதிப்பட நினைத்து, பாவம் செயும் - பாவனை செய்தற்குரிய, சிவகவசந் தன்னை - சிவகவசமாகிய இதனை, உடன்படத் தரிப்பையானல் - மனோசம்மதமாக அணிகுவையாயின், உலம் - திரள்கல்லை, பொரு - நிகர்த்த, குவவு - திரட்சியாகிய, தோளாய் - புயங்களையுடையவனே!

(பொ - ரை.) வளைந்த புறமயிர் முதலியவற்றையுடைய பூர்ண பலமுள்ள கொடிய மிருகங்கள் முழுதும் பிநாகமானது கொல்லக்கடவது என்று இவை யாவும் மனம் உறுதிப்பட நினைத்து, பாவனை செய்தற்குரிய சிவகவசமாகிய இதனை மனோசம்மதமாக அணிகுவையாயின் திரள்கல்லை நிகர்த்த திரட்சியாகிய புயங்களையுடையவனே!

(க - ரை.) மிகுந்த வலியுள்ள கொடிய மிருகங்களையெல்லாம் பிநாகம் கொல்லக்கடவது என்று இந்தச் சிவகவசத்தை நீ பாவனை செய்து தரித்துக்கொள்வையானல் திரண்ட புயங்களையுடையவனே!

(வி - ரை.) மாக்கள் - மிருகங்கள் (புலி முதலாயின). பிநாகம் - சிவன்கை வில். உலம் - திரண்ட கல். (௨௦)

வேறு.

பஞ்சபா தகங்கள்போம் பகைகண் மாய்ந்திடு
மஞ்சலின் மறலியு மஞ்சி யாட்செயும்
வஞ்சநோ யொழிந்திடும் வறுமை தீர்ந்திடுந்
தஞ்சமென் றிதனைநீ தரித்தல் வேண்டுமால்.

(ப-ரை.) பஞ்ச பாதகங்கள் போம் - பஞ்சமாபாதகங்கள் நீங்கும்; பகைகள் மாய்ந்திடும் - பகைகள் அழிந்துபோகும்; அஞ்சல் இல் மறலி

யும் - (ஒருவருக்கும்) அஞ்சுதலில்லாதயமனும், அஞ்சி - பயந்து; ஆள் செயும் - அடிமை செய்வான்; வஞ்சம் நோய் - வஞ்சகமாகிய நோய்கள் யாவும், ஒழிந்திடும் - நீங்கிப்போம்; வறுமை தீர்ந்திடும் - தரித்திரம் ஒழிந்துபோம்; இதனை - இந்தக் கவசத்தை, தஞ்சம் என்று - ஆதாரமென்று, நீ தரித்தல் வேண்டும்-நீ தரித்துக்கொள்ள வேண்டும்.

(பொ - ரை.) பஞ்சமாபாதகங்கள் நீங்கும்; பகைகள் அழிந்து போகும்; (ஒருவருக்கும்) அஞ்சுதலில்லாத யமனும் பயந்து அடிமை செய்வான்; வஞ்சகமாகிய நோய்கள் யாவும் நீங்கிப்போம்; தரித்திரம் ஒழிந்துபோம்; இந்தக் கவசத்தை ஆதாரமென்று நீ தரித்துக்கொள்ள வேண்டும்.

(க - ரை.) பஞ்சமாபாதகங்கள் முதலியவை யொழியுமாதலால் இந்தக் கவசத்தை நீ தரித்துக்கொள்ளவேண்டும்.

(வி - ரை.) பஞ்சபாதகங்கள் - ஐம்பெரும் பாவங்கள்; அவை யாவன: கொலை, பொய், களவு, கள்ளுண்டல், குருநிந்தை என்பன. மாய்தல் - அழிதல். நோய் என்றது மனோவ்யாதி, சரீரவ்யாதி என்னுமிரண்டையும். தஞ்சம் - பற்று (உறுதி). (உக)

## சிவகவசம் மூலமும் உரையும்

## முற்றுப்பெற்றது.



உ

தேவ்யைநம:

வச்சிரபஞ்சரமென்னும்

# சத்தி கவசம்

## மூலமும் உரையும்.

[தேவர்கள் தங்களுக்கு நெடுநாள் இடரிழைத்திருந்த தாரக னென்னும் அவுணனை உமாதேவியானவள் சங்கரித்து அவ்விடரை நீக்கியது கண்டு அத்தேவியை வணக்கஞ்செய்து துதிசெய்தது இக் கவசமென்றறிக.]

அங்கையிற் கரகந் தாங்கும் பிரமாணி யருளி னோடுந்
துங்கமென் சென்னி காக்க வயிணவி துகளி லாக
மெங்கணுங் காக்க செய்ய வேந்தெழி லுருத்தி ராணி
தங்குமெண் டிசையு மன்பு தழைத்திட வினிது காக்க.

(பதவுரை.) அங்கையில்-அங்கையினிடத்தில், கரகம் தாங்கும் - கமண்டலத்தைத் தாங்குகிற, பிரமாணி—, அருளினோடும் - கிருபையுடனே, துங்கம் - உயர்வாகிய, என் - எனது, சென்னி - சிரத்தை, காக்க - காக்கக்கடவள்; வயிணவி—, துகள் இல் - குற்றமற்ற, ஆகம் எங்கணும் காக்க-சரீரமுழுதுங் காக்கக்கடவள்; செய்ய-சிவந்த, ஏந்து எழில் - அழகைக்கொண்ட, உருத்திராணி - ருத்ராணியானவள், தங்கும் எண்டிசையும்-பொருந்திய அஷ்டதிக்குகளிலும், அன்பு தழைத்திட - அன்புமிக, இனிது காக்க - இனிதாகக் காக்கக்கடவள்.

(பொழிப்புரை.) அங்கையினிடத்தில் கமண்டலத்தைத் தாங்குகிற பிராமணி: கிருபையுடனே உயர்வாகிய எனது சிரத்தைக் காக்

கக்கடவள்; வயிணவி : குற்றமற்ற சரீர முழுதுங் காக்கக்கடவள்; சிவந்த அழகைக்கொண்ட ருத்ராணியானவள் பொருந்திய அஷ்ட திக்குகளிலும் அன்புமிக இனிதாகக் காக்கக்கடவள்.

(கருத்துரை.) பிரமாணி முதலிய சத்திகள், என் சிர முதலியவற்றைக் காக்கக்கடவர்.

(விசேடவுரை.) வச்சிரபஞ்சரம் - வயிரக்கூடு; இது ஒருவராலும் பேதிக்கப்படாததுபோல இந்தக் கவசமும் ஒருவராலும் பேதிக்கப்படாததாதலால் இதற்கிப்பெயரிட்டு வழங்கலாயிற்று. பிரமாணி - பிரமபத்தினி; வயிணவி - விஷ்ணுபத்தினி; உருத்திராணி - உருத்திர பத்தினி; இம்மூன்று வடிவமாயிருப்பதும் தானேயாதலால் இவ்வாறு கூறினர். (௧)

கொன்னுனைச் சூலி சென்னி மயிரினைக் குறித்துக் காக்க
மன்னுவெண் பிறைதாழ் சென்னி வயங்கொளி நெற்றி காக்க
பன்மயிர்ப் புருவ நாளும் பரிவொடு முமையாள் காக்க
வென்னையாண் முக்க ணீச னிறைவிகண் ணிணைகள் காக்க.

(ப - ரை.) கொல் - கொல்லுகிற, நுனை - கூர்மையையுடைய, சூலி - சூலியானவள், சென்னி மயிரினை - தலைமயிரை, குறித்து காக்க - குறிக்கொண்டு காக்கக்கடவள்; மன்னு - நிலைபெற்ற, வெள் பிறை தாழ் - வெண்பிறை தங்கிய, சென்னி - சிரத்தை யுடையவள், வயங்கு ஒளி - விளங்குகின்ற வொளியையுடைய, நெற்றி காக்க - நெற்றியைக் காக்கக்கடவள்; பல் மயிர் புருவம்-பல மயிர்களையுடைய புருவத்தை, நாளும் - நாள்தோறும், உமையாள் - உமையவள், பரிவொடும் காக்க - அன்புடனே காக்கக்கடவள்; என்னை ஆள் - என்னை யாண்டருளுகின்ற, முக்கண் ஈசன் - முக்கணீசனது, இறைவி - இறைவியானவள், கண் இணைகள் காக்க - இரண்டு கண்களையும் காக்கக்கடவள்.

(பொ - ரை.) கொல்லுகிற கூர்மையையுடைய சூலியானவள் தலைமயிரை குறிக்கொண்டு காக்கக்கடவள்; நிலைபெற்ற வெண்பிறை தங்கிய சிரத்தையுடையவள் விளங்குகின்ற வொளியையுடைய நெற்றியைக் காக்கக்கடவள்; பல மயிர்களையுடைய புருவத்தை நாள் தோறும் உமையவள் அன்புடனே காக்கக்கடவள்; என்னை யாண்டருளுகின்ற முக்கணீசனது இறைவியானவள் : இரண்டு கண்களையும் காக்கக்கடவள்.

(க - ரை.) சூலி முதலானோர், தலைமயிர் முதலியவற்றைக் காக்கக்கடவர்.

(வி - ரை.) சூலி - சூலாயுதத்தை யுடையவள். தாழ்தல் - தங்குதல். உமை - உமா என்னும் வடசொல்லீறு திரிந்துநின்றது. உமா என்பதில், உ-ஓ சிறுவி என்றும், மா-வேண்டாம் என்றும் பொருள் படுதலாலும், தாயானவள் தன் தபோபலத்தால் கடிந்து பேசுதற்குரியளா யிருந்தமையாலும் இப்பெயர் வந்தது; தாய் - மலையரையன் மனைவி; அன்றியும் இதற்கு ஆத்மகோடிகளை ரக்ஷிப்பவள் என்றும் வேறொரு பொருள் கூறுதலுமுண்டு. (உ)

வயமிகு மிமய வல்லி மூக்கினை மகிழ்ந்து காக்க
செயையொடு விசயை மேல்கீ ழிதழினைச் சிறந்து காக்க
வயிலுடைச் சுருதி தூய வஞ்செவி காக்க தன்னொன்
பயின்மல ருறையுஞ் செல்வி பல்லினை யுவந்து காக்க.

(ப - ரை.) வயம் மிகும் - வெற்றி மிகுந்த, இமயவல்லி-இமயவல்லியானவள், மூக்கினை - நாசியை, மகிழ்ந்து காக்க - மகிழ்ந்து காக்கக்கடவள்; சயையொடு விசயை - ஜயையொடு விஜயை யென்பவர்கள், மேல் கீழ் இதழினை - மேல் கீழ் உதடுகளை, சிறந்து காக்க-சிறப்பாகக் காக்கக்கடவர்; அயில் உடை - வேற்படையையுடைய, சுருதி - சுருதியென்பவள், தூய - பரிசுத்தமாகிய, அம் செவி காக்க - அழ

கிய செவிகளைக் காக்கக்கடவள்; தண் என் - குளிர்ச்சியாகிய, பயில் - நெருங்கிய, மலர் உறையும் செல்வி - மலரில் வாழ்கின்ற செல்வியானவள், பல்லினை - பற்களை, உவந்து காக்க - மகிழ்ந்து காக்கக்கடவள்.

(பொ - ரை.) வெற்றி மிகுந்த இமயவல்லியானவள் : நாசியை மகிழ்ந்து காக்கக்கடவள்; ஜயையொடு விஜயை யென்பவர்கள்: மேல் கீழ் உதடுகளைச் சிறப்பாகக் காக்கக்கடவர்; வேற்படையையுடைய சுருதி யென்பவள் பரிசுத்தமாகிய அழகிய செவிகளைக் காக்கக்கடவள்; குளிர்ச்சியாகிய நெருங்கிய மலரில் வாழ்கின்ற செல்வியானவள்: பற்களை மகிழ்ந்து காக்கக்கடவள்.

(க - ரை.) இமயவல்லி முதலானோர், நாசி முதலானவற்றைக் காக்கக்கடவர்.

(வி - ரை.) இமயவல்லி-இமயமலைமேற் படர்ந்த கொடியென்றும், இமயமலை யென்னும் பர்வதராஜ குமாரியென்றும் பொருள்படும். செயை - வெற்றியுடையவள். விசயை - மிகு வெற்றியுடையவள். சுருதி - வேதரூபி. மலர் உறையுஞ் செல்வி - இலக்குமி. (௩)

சண்டிமென் கபோலங் காக்க தவளநாண் மலரின் வைகு
மொண்டொடி நன்னாக் காக்க விசயைமங் கலைமற் றொவ்வாக்
கண்கவர் நாடி காக்க காத்திபா யனியெஞ் ஞான்று
முண்டக மலரிற் றாய முகத்தினைச் சிறந்து காக்க.

(ப - ரை.) சண்டி - சண்டியென்பவள், மெல் கபோலம் காக்க - மெல்லிய கன்னத்தைக் காக்கக்கடவள்; தவளம் - வெண்மையாகிய, நாள் - புதிய, மலரில் வைகும் - மலரில் வாழ்கிற, ஒள் தொடி - மாதானவள், நல் நா காக்க - நல்ல நாவினைக் காக்கக்கடவள்; விசயை மங்கலை - விசயை மங்கலை யென்பவர்கள், மற்று ஒவ்வா - வேறொப்பில்லாத, கண் கவர் - கண்களைக் கவர்ந்துகொள்ளத்தக்க, நாடி காக்க - நாடியைச்

காக்கக்கடவர்; காத்தியாயநி - காத்யாயநியென்பவள், எஞ்ஞான்றும் - எந்நாளும், முண்டக மலரின் - தாமரை மலர்போன்ற, தூய - பரிசுத்தமாகிய, முகத்தினை - முகத்தை, சிறந்து காக்க - சிறப்பாகக் காக்கக்கடவள்.

(பொ - ரை.) சண்டியென்பவள்: மெல்லிய கன்னத்தைக் காக்கக்கடவள்; வெண்மையாகிய புதிய மலரில் வாழ்கிற மாதானவள்: நல்ல நாவினைக் காக்கக்கடவள்; விசயை மங்கலை யென்பவர்கள் வேறெருப்பில்லாத கண்களைக் கவர்ந்துகொள்ளத்தக்க நாடியைக் காக்கக்கடவர்; காத்யாயநி யென்பவள் எந்நாளும் தாமரை மலர்போன்ற பரிசுத்தமாகிய முகத்தைச் சிறப்பாகக் காக்கக்கடவள்.

(க - ரை.) சண்டி முதலானோர், கபோல முதலானவற்றைக் காக்கக்கடவர்.

(வி - ரை.) சண்டி - வேகத்தை யுடையவள். தளோநாள் மலரில் வைகும் ஒண்டொடி-சாரசுவதி. விசயை - வெற்றியுள்ளவள். மங்கலை-மங்களகர முள்ளவள். காத்யாயநி - மோக்ஷமார்க்கங்களைத்தனை யுள்ளனவென்று விசாரிப்பவனாகிய கத்யயநன் என்றொரு இருடியுளன்; அவன் கோத்திரத்திற் பிறந்தவளாதலால் இப்பெய ருண்டாயிற்று.()

காளமுண் டிருண்ட நீல கண்டிமென் கழுத்துக் காக்க
கோளில்பூ தார சத்தி சுவற்புறங் காக்க கூர்மி
நீளொளிச் சந்தி காக்க வயிந்திரி நெறியி னேடுந்
தோளிணை காக்க பத்மை துணைமல ரங்கை காக்க.

(ப - ரை.) காளம் உண்டு - நஞ்சையுண்டு, இருண்ட - கறுத்திருக்கிற, நீலகண்டி - நீலகண்டி யென்பவள், மெல் - மெல்லிய, கழுத்து காக்க - கழுத்தைக் காக்கக்கடவள்; கோள் இல் - துன்பமில்லாத, பூதாரசத்தி-பூதாரசத்தி யென்பவள், சுவல் புறம் காக்க-பிடர்ப்புறத்தைக் காக்கக்கடவள்; கூர்மி - கூர்மியென்பவள், நீள் ஒளி -

பேரொளியையுடைய, சந்தி காக்க - சந்திகளைக் காக்கக்கடவள்; அயிந்திரி - ஐந்த்ரியென்பவள், நெறியினோடும்-முறையுடனே, தோளிணை காக்க - இரு தோள்களையும் காக்கக்கடவள்; பத்மை - பத்மை யென்பவள், மலர் - தாமரை மலர்போன்ற, துணை - இரண்டாகிய, அங்கை காக்க - அங்கையைக் காக்கக்கடவள்.

(பொ - ரை.) நஞ்சையுண்டு கறுத்திருக்கிற நீலகண்டி யென்பவள் : மெல்லிய கழுத்தைக் காக்கக்கடவள்; துன்பமில்லாத பூதார சத்தியென்பவள் : பிடர்ப்புறத்தைக் காக்கக்கடவள்; கூர்மி யென்பவள் பேரொளியையுடைய சந்திகளைக் காக்கக்கடவள்; ஐந்த்ரியென்பவள் முறையுடனே இரு தோள்களையும் காக்கக்கடவள்; பத்மை யென்பவள் தாமரை மலர்போன்ற இரண்டாகிய அங்கையைக் காக்கக்கடவள்.

(க - ரை.) நீலகண்டி முதலானோர், கழுத்து முதலானவற்றைக் காக்கக்கடவர்.

(வி - ரை.) நீலகண்டி - நீலநிறமான கழுத்தை யுடையவள். பூதாரசத்தி - வாராஹி, (பூதாரம் - பன்றி). அயிந்திரி - இந்திராணி. பத்மை - இலக்குமி. (ரு)

கமலைகை விரல்கள் காக்க விரசைகை யுகிர்கள் காக்க
திமிரமுண் டொளிரும் வெய்யோன் மண்டலத் துறையுஞ்
யெமதிரு வாகு மூலங் காக்கவா னவர்க ளேத்த [செல்வி
வமிர்தல கரிநா ளுறு மகன்மணி மார்பங் காக்க.

(ப - ரை.) கமலை - கமலை யென்பவள், கைவிரல்கள் காக்க - கைவிரல்களைக் காக்கக்கடவள்; விரசை - விரசை யென்பவள், கை உகிர்கள் காக்க-கைநகங்களைக் காக்கக்கடவள்; திமிரம் உண்டு-இருளை யுண்டு, ஒளிரும் - விளங்குகிற, வெய்யோன் மண்டலத்து - சூரிய மண்டலத்தில், உறையும் - வசிக்கின்ற, செல்வி - செல்வியானவள்,

எமது - எம்முடைய, இரு-இரண்டாகிய, வாகுமூலம் காக்க-பாஹுமூலங்களைக் காக்கக்கடவள்; வானவர்கள் ஏத்த - தேவர்கள் துதிக்க, அமிர்தலகரி - அம்ருதலஹரி யென்பவள், நாள் நாளும் - தினந்தோறும், அகல் - அகன்ற, மணி - அழகாகிய, மார்பம் காக்க - மார்பைக் காக்கக்கடவள்.

(பொ - ரை.) கமலை யென்பவள் : கைவிரல்களைக் காக்கக்கடவள்; விரசை யென்பவள : கைநகங்களைக் காக்கக்கடவள்; இருளையுண்டு விளங்குகிற சூரியமண்டலத்தில் வசிக்கின்ற செல்வியானவள் எம்முடைய இரண்டாகிய பாஹுமூலங்களைக் காக்கக்கடவள்; தேவர்கள் துதிக்க அம்ருதலஹரி யென்பவள் தினந்தோறும் அகன்ற அழகாகிய மார்பைக் காக்கக்கடவள்.

(க-ரை.) கமலை முதலானோர், கைவிரல்கள் முதலானவற்றைக் காக்கக்கடவர்.

(வி - ரை.) கமலை - இலக்குமி. வெய்யோன் மண்டலத்துறையுஞ் செல்வி - மார்த்தாண்டி. வாகுமூலம் - தோளடி. அமிர்தலகரி - அமிர்தப்பேரலையை யுடையவள், அமிர்தச் செருக்குள்ளவள். (சு)

தரித்திரி யிதயங் காக்க தயித்தியர்ச் செகுப்போண் மிக்க
கருத்தொடு முலைகள் காக்க சகத்தினி லிறைமை பூண்டோ
டிருத்தகு வயிறு காக்க திகழ்தபோ கதிதன் னுள்ளத்
தருத்தியி னுந்தி காக்க வசைவளர் முதுகு காக்க.

(ப - ரை.) தரித்திரி - தரித்திரி யென்பவள், இதயம் காக்க - இருதயத்தைக் காக்கக்கடவள்; தயித்தியர் செகுப்போள் - அசுரரைக் கொல்பவள், மிக்க கருத்தொடு - மிகுந்த கருத்துடனே, முலைகள் காக்க-முலைகளைக் காக்கக்கடவள்; சகத்தினில்-உலகத்தில், இறைமை பூண்டோள் - தலைமை பூண்டவள், திரு தகு - அழகு பொருந்திய, வயிறு காக்க - வயிற்றைக் காக்கக்கடவள்; திகழ்-விளங்குகிற, தபோகதி - தபோகதி யென்பவள், தன் உள்ளத்து அருத்தியின் - தன்

மனத்து ஆசையினுல், உந்தி காக்க-நாபியைக் காக்கக்கடவள்; அசை-அசையென்பவள், வளர் - வளராநின்ற, முதுகு காக்க - முதுகைக் காக்கக்கடவள்.

(பொ-ரை.) தரித்திரி யென்பவள்: இருதயத்தைக் காக்கக்கடவள்; அசுரரைக் கொல்பவள் மிகுந்த கருத்துடனே மூலகளைக் காக்கக்கடவள்; உலகத்தில் தலைமை பூண்டவள்: அழகு பொருந்திய வயிற்றைக் காக்கக்கடவள்; விளங்குகிற தபோகதி யென்பவள்: தன் மனத்து ஆசையினுல் நாபியைக் காக்கக்கடவள்; அசை யென்பவள்: வளராநின்ற முதுகைக் காக்கக்கடவள்.

(க-ரை.) தரித்திரி முதலானோர், இதய முதலானவற்றைக் காக்கக்கடவர்.

(வி-ரை.) தரித்திரி - உலகத்தைத் தாங்குமவள். தயித்தியர் செகுப்போள் - அசுரசம்ஹாரி. சகத்தினில் இறைமை பூண்டோள்-ஜகந்நாயகி. தபோகதி - தபோகதியா யிருப்பவள் (தவத்தினர்க்கு நற்கதியாகிய மோக்ஷத்தை யருள்பவள்). அருத்தி-ஆசை. (எ)

கருதரு விகடை காக்க கடிதலம் பாமை வாய்ந்த
குருமணிச் சகனங் காக்க குகாரணி குய்யங் காக்க
வருடா வரும பாய கந்தினி யபானங் காக்க
தெருளுடை விபுலை யென்றுஞ் சிறப்புடைக் குறங்கு காக்க.

(ப-ரை.) கருத அரு - நினைத்தற்கரிய, விகடை - விகடை யென்பவள், கடிதலம் காக்க - கடிப்ரதேசத்தைக் காக்கக்கடவள்; பாமை - பாமை யென்பவள், வாய்ந்த - பொருந்திய, குரு மணி - ஒளியுள்ள மணியணி பணிந்த, சகனம் காக்க - சகநத்தைக் காக்கக்கடவள்; குகாரணி - குகாரணி யென்பவள், குய்யம் காக்க - குய்யத்தைக் காக்கக்கடவள்; அருள் தர வரும்-அருள் செய்ய வருகிற, அபாயகந்திரி - அபாயகந்திரி யென்பவள், அபானம் காக்க - அபானத்தைக் காக்கக்கடவள்; தெருள் உடை-தெளிவையுடைய, விபுலை-விபுலையென்ப

வள், என்றும் - எந்நாளும், சிறப்பு உடை - மேன்மையையுடைய, குறங்கு காக்க - தொடைகளைக் காக்கக்கடவள்.

(பொ-ரை.) நினைத்தற்கரிய விகடை யென்பவள் : கடிப்ரதேசத்தைக் காக்கக்கடவள்; பாமை யென்பவள் : பொருந்திய ஒளியுள்ள மணியணி யணிந்த சகநத்தைக் காக்கக்கடவள்; குமாரணியென்பவள்: குய்யத்தைக் காக்கக்கடவள்; அருள் செய்பவருகிற அபாயகந்திரியென்பவள்: அபாநத்தைக் காக்கக்கடவள்; தெளிவையுடைய விபுலையென்பவள் : எந்நாளும் மேன்மையையுடைய தொடைகளைக் காக்கக்கடவள்.

(க-ரை.) விகடை முதலானோர், கடிப்ரதேச முதலானவற்றைக் காக்கக்கடவர்.

(வி-ரை.) விகடை - ஆநந்தோந்மத்த முடையவள். கடிதலம் - அரை (இடுப்பு). பாமை - பெண்மையிற் சிறந்தவள்; அன்றி அழகிற் சிறந்தவள். சகநம்-தொடையி னுட்பக்கம். குய்யம்-ஆண்குறி, பெண்குறி. விபுலை - பெருமை யுடையவள், அன்றி இமயமலையிற் பிறந்தவள். (அ)

லளிதைமென் முழந்தாள் காக்க வியற்சபை கணைக்கால் காக்க
களிதரு கோரை வாய்ந்த பாட்டினைக் காக்க மிக்க [க்க
வளிகொள்பா தலத்திற் செல்வோ ளணிகெழு புறந்தாள் கா
வொளிர்நகம் விரல்கள் சந்திரி யுக்கிரி யுவந்து காக்க.

(ப-ரை.) லளிதை - லளிதை யென்பவள், மெல் - மெல்லிய முழந்தாள் காக்க-முழங்காலைக் காக்கக்கடவள்; இயற்சபை-இயற்கையாகிய சபையென்பவள், கணைக்கால் காக்க - கணைக்கால்களைக் காக்கக்கடவள்; களி தரு - களிப்பை யுண்டாக்குகிற, கோரை - கோரையென்பவள், வாய்ந்த - பொருந்திய, பாட்டினை காக்க - பாடுகளைக் காக்கக்கடவள்; மிக்க அளி கொள் - மிகுந்த அருளைக்கொண்ட, பாதலத்திற் செல்வோள் - பாதாளத்திற் செல்கின்றவள், அணி கெழு

அழகு பொருந்திய, புறந்தாள் காக்க - புறங்காலைக் காக்கக்கடவள்; ஒளிர் நகம் விரல்கள் - பிரகாசிக்கிற நகம் விரல்கள் என்பவற்றை, சந்திரி உக்கிரி - சந்திரி உக்கிரியென்பவர், உவந்து காக்க - மகிழ்ந்து காக்கக்கடவர்.

(பொ - ரை.) லளிதை யென்பவள் : மெல்லிய முழங்காலைக் காக்கக்கடவள்; இயற்கையாகிய சபையென்பவள் : கணைக்கால்களைக் காக்கக்கடவள்; களிப்பை யுண்டாக்குகிற கோரை யென்பவள் : பொருந்திய பாடுகளைக் காக்கக்கடவள்; மிகுந்த அருளைக்கொண்ட பாதாளத்திற் செல்கின்றவள் : அழகு பொருந்திய புறங்காலைக் காக்கக்கடவள்; பிரகாசிக்கிற நகம் விரல்கள் என்பவற்றை சந்திரி உக்கிரி யென்பவர்: மகிழ்ந்து காக்கக்கடவர்.

(க-ரை.) லளிதை முதலானோர், முழந்தாள் முதலானவற்றைக் காக்கக்கடவர்.

(வி - ரை.) இலளிதை - அழகுள்ளவள் (ஓர் சத்தி விசேடம்). சபை - ஜபத்துக்குரியவள். கோரை - கோரரூபி (ஓர் சத்தி விசேடம்). பாதலத்திற் செல்வோள் - நாகி (ஓர் சத்தி விசேடம்). சந்திரி-பிறையணிந்தவள் (ஓர் சத்தி). உக்கிரி-உக்கிரரூபி (ஓர் சத்தி) (கூ)

தலத்துறை மடந்தை யுள்ளங் காலிணை காக்க தண்ணென்
மலர்த்திரு மனையைக் காக்க வயங்குகேத் திரதை யோங்கி
யுலப்பில்கேத் திரங்கள் காக்க பிரியகரை யொழிவ றுது
நலத்தகு மக்க டம்மை நன்குறக் காக்க வன்றே.

(ப-ரை.) தலத்து உறை-பூமியில் வாழ்கிற, மடந்தை-மடந்தை யென்பவள், உள்ளங்கால் இணை காக்க - உள்ளங்கால்களிரண்டையுங் காக்கக்கடவள்; தண் என்-குளிர்ச்சியாகிய, மலர்-தாமரைமலரையுடைய, திரு - திருவென்பவள், மனையை காக்க - வீட்டினைக் காக்கக்கடவள்; வயங்கு - விளங்குகிற, கேத்திரதை-க்ஷேத்ரதை யென்பவள், ஓங்கி - உயர்ந்து, உலப்பு இல் - அழிவில்லாத, கேத்திரங்கள்

காக்க-க்ஷேத்ரங்களைக் காக்கக்கடவள்; பிரியகரை-ப்ரியகரை யென்பவள், ஒழிவு அரூது - ஒழியாமல், நலத்தகு மக்கள் தம்மை - நன்மை பொருந்திய மக்களை, நன்கு உற காக்க - நன்மை பொருந்தக் காக்கக்கடவள்.

(பொ-ரை.) பூமியில் வாழ்கிற மடந்தை யென்பவள் : உள்ளங் கால்களிரண்டையுங் காக்கக்கடவள்; குளிர்ச்சியாகிய தாமரைமலரை யுடைய திருவென்பவள் : வீட்டினைக் காக்கக்கடவள்; விளங்குகிற க்ஷேத்ரதை யென்பவள் உயர்ந்து அழிவில்லாத க்ஷேத்ரங்களைக் காக்கக்கடவள்; ப்ரியகரை யென்பவள் ஒழியாமல் நன்மை பொருந்திய மக்களை நன்மை பொருந்தக் காக்கக்கடவள்.

(க-ரை.) மடந்தை முதலானோர், உள்ளங்கால் முதலியவற்றைக் காக்கக்கடவர்.

(வி-ரை.) தண்ணென் மலர்த்திரு - இலக்குமி. க்ஷேத்ரதை - க்ஷேத்ரங்களுக்குத்தலைவி. பிரியகரை-அன்பரிடத்து அன்புசெய்பவள்.

உயர்சனு தனியெஞ் ஞான்று மொழிவறு மாயுள் காக்க
மயர்வறு சீர்த்தி யாவு மாதேவி காக்க மிக்க
செயிரறு தருமம் யாவுந் தனுத்திரி சிறந்து காக்க
வியல்புடைக் குலத்தை வாய்ந்த குலதேவி யினிது காக்க.

(ப-ரை) உயர் - உயர்ந்த, சனாதனி - சனாதனியென்பவள், எஞ்ஞான்றும் - எந்நாளும், ஒழிவு அறும் - நீங்கலில்லாத, ஆயுள் காக்க - ஆயுளைக் காக்கக்கடவள்; மயர்வு அறு - மயக்கமற்ற, சீர்த்தி யாவும் - கீர்த்திகளெல்லாவற்றையும், மாதேவி காக்க-மஹாதேவி காக்கக்கடவள்; மிக்க - மேலான, செயிர் அறு - குற்றமற்ற, தருமம் யாவும் - தர்மங்களெல்லாவற்றையும், தனுத்திரி - தனுத்திரியென்பவள், சிறந்து காக்க - சிறப்பாகக் காக்கக்கடவள்; இயல்பு உடை குலத்தை - பெருந்தன்மையுடைய குலத்தினை, வாய்ந்த குலதேவி - பொருந்திய குலதேவியென்பவள், இனிது காக்க - இனிதாகக் காக்கக்கடவள்.

(போ - ரை.) உயர்ந்த சாதகி யென்பவள்-எந்நாளும் நீங்கலில்லாத ஆயுளைக் காக்கக்கடவள்; மயக்கமற்ற கீர்த்திக ளெல்லாவற்றையும் மஹாதேவி காக்கக்கடவள்; மேலான குற்றமற்ற தர்மங்களெல்லாவற்றையும் தருத்திரியென்பவள் சிறப்பாகக் காக்கக்கடவள்; பெருந்தன்மையுடைய குலத்தினைப் பொருந்தியகுலதேவியென்பவள் இனிதாகக் காக்கக்கடவள்.

(க - ரை.) சாதகி முதலானோர், ஆயுள் முதலியவற்றைக் காக்கக்கடவர்.

(வி - ரை.) சாதகி - துர்க்கை. மாதேவி - பெருந்தேவி. குலதேவி - குலதெய்வம். (கக)

சற்கதி பிரதை நல்லோ ரியைபினைத் தயாவிற் காக்க
விற்கொடும் போரி னீரில் வெளியினில் வனத்திற் சூதி
லிற்புற மதனி லோங்கு சர்வாணி காக்க வென்னுப்
பொற்றரு மலர்க டூவிப் புங்கவ ரேத்தி னாரே.

(ப - ரை.) சற்கதி - நற்கதியைத் தருகிற, பிரதை - பிரதையென்பவள், நல்லோர் இயைபினை - நல்லோருடைய தொடர்பை, தயாவின் - தயையோடு, காக்க - காக்கக்கடவள்; வில் - வில்லைக் கொண்டு செய்கிற, கொடும் போரில் - கொடிய போரிலும், நீரில் - நீரிலும், வெளியினில் - வெளியிலும், வனத்தில் - வனத்திலும், சூதில் - சூதாட்டத்திலும், இல்புறமதனில் - வீட்டின் புறத்திலும், ஓங்கு - உயர்ந்த, சர்வாணி - சர்வாணியானவள், காக்க என்னு - காக்கக்கடவளென்று, பொன் - அழகிய, தரு - கற்பகத்தருவின், மலர்கள் - புஷ்பங்களை, தூவி - அர்ச்சித்து, புங்கவர் - தேவர்கள், ஏத்தினார் - துதித்தார்கள்.

(போ-ரை.) நற்கதியைத் தருகிற பிரதையென்பவள் நல்லோருடைய தொடர்பை தயையோடு காக்கக்கடவள்; வில்லைக்கொண்டு

செய்கிற கொடிய போரிலும், நீரிலும், வெளியிலும், வனத்திலும், சூதாட்டத்திலும், வீட்டின் புறத்திலும், உயர்ந்த சர்வாணியானவள் காக்கக்கடவளென்று அழகிய கற்பகத்தருவின் புஷ்பங்களை அர்ச்சித்துத் தேவர்கள் துதித்தார்கள்.

(கு - ரை.) பிரதை முதலானோர், நல்லோர் தொடர்பு முதலியவற்றைக் காக்கக்கடவரென்று தேவர்கள் கற்பமலர்களைத் தூவித் துதித்தார்கள்.

(வி - ரை.) பிரதை ஓர்சத்தி (ஈகையிற் சிறந்தவள்). சர்வாணி: சர்வன் - பிரளயகாலத்தில் பூதங்களை யழிப்பவனாகிய சிவன்; அவன் மனைவியாதலால் இப்பெயர் உண்டாயிற்று; அன்றியும், எல்லா மங்களங்களையு முடையவள் என்றும் பொருள்கூறுவர் வடநூலார். (கஉ)

---

இந்த வச்சிரபஞ்சரத்தை யாவர் செபித்தாலும், அவர்களுடைய தேகத்தி லுண்டாகிய வெப்புநோ யொழியும்; எட்டுத்தாஞ் சலத்தில் அபிமந்திரித்து அதனை உட்கொண்டால், வயிற்றிலே பொருந்திய குன்மஞ் சூலை முதலிய நோயனைத்தும் நீங்கும்; இரவில் வழி நடக்கும்போது செபித்தால், பூதம் பேய் இவைகள் தொடமாட்டாவாம்; பிள்ளையைப் பெற மாட்டாமல் வருத்தப்படுகின்ற மாதருடைய அருகிலிருந்து செபித்தாலும், அல்லது நீரிலோதி உட்கொள்ளக் கொடுத்தாலும், விரைவிலே வருத்த நீங்கிப் பிள்ளைகளைப் பெறுவார்கள்; யுத்தத்திலே செபித்தால் சத்துருக்கள் தோல்வி யடைவார்கள்; சிறுபிள்ளைகளுக்கு நீரிலோதி உட்கொள்ளக் கொடுத்தால் வியாதிகள் நீங்கும்; இதை யாவரோதினும் அவர்களை உமாதேவி காப்பாற்றுவாள்.

சத்தி கவசம் மூலமும் உரையும்

முற்றுப்பெற்றது.

---

## குமரகுருபரசுவாமிகள் சரித்திர வரலாறு.



தென்தேசத்திலே திருநெல்வேலியிலே ஸ்ரீ வைகுண்டம் என்னும் திவ்விய க்ஷேத்திரத்திலே இருநூற்றெண்பது வருஷங்களுக்கு முன்னர் சண்முகசிகாமணிக் கவிராயர் என்னும் சைவவேளாளர் ஒருவர் இருந்தனர். இவர் மனைவியார் சிவகாமசுந்தரியம்மை யென்பவர். இவர்கள் நெடுநாள் பிள்ளைப்பேறின்றி யிருந்து பின் ஒரு ஆண்குழந்தையைப் பெற்றார்கள். அந்தக் குழந்தைக்குச் செய்யவேண்டிய சடங்குகளை யெல்லாம் அந்தந்தக் காலத்திலே தவறாமல் செய்துவந்தார்கள். அந்தக் குழந்தை நாலைந்து வயது வரையில் மூங்கைப் பிள்ளையாக இருந்தது. குழந்தை பேசத்தொடங்கின பின்பு அது முருகன் திருவருளென்றெண்ணி அதற்குக் குமரகுருபரன் என்று நாமமிட்டனர்.

குமரகுருபரரும் "கவிதாவனிதா" என்றும், "A poet is born not made" என்றும் சொல்லுகிறபடியே வரகவியாய்ச் சிறுவயதிலேதானே கந்தர் கலிவெண்பா, மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழ் என்பன முதலாம் பிரபந்தங்களைப் பாடுவாராயினர். மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழை அக்காலத்து மதுரையில் அரசு செலுத்திவந்த திருமலை நாயகருடைய சந்நிதானத்தில் அரங்கேற்றினர். நாயகரும் அதன் அருமை பெருமையை அறிந்து குமரகுருபரரை வெகுவாய்ச் சன்மானிக்கத் தொடங்கினர். நாயகருடைய வேண்டுகோளின்படி

யே மீனாக்ஷியம்மை குறம், மீனாக்ஷியம்மை இரட்டைமணி மாலை என்னும் இரண்டு பிரபந்தங்களையும், சோமசுந்தரக் கடவுள்மீது மதுரைக் கலம்பகம் என்னும் பிரபந்தத்தையும் பாடினர். பின் ஒருநாள் திருமலை நாயகர் நெடுநேரம் வரைக்கும் ஏதோ காரியார்த்தமாக அமுது செய்யாதிருந்தது கண்டு,

> "வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
> தொகுத்தார்க்குந் துய்த்த லரிது."

என்னுந் திருக்குறளை எடுத்தோதினர்; அது கேட்ட அரசர் மகிழ்ந்து, "தமிழ் வேதமாகுந் திருக்குறளை முற்றும் ஆராய்ந்து தெளிதற்கு அவகாசமில்லை; ஆதலால், அதில் உள்ள நீதிசாரங்களைத் திரட்டிச் சுருக்கமாக ஒரு நூலைச் செய்தருளித் தந்தால் நான் அதனைப் பாராயணம் பண்ணுவேன்" என்று வேண்ட, அப்படியே நீதிநெறிவிளக்கம் என்னும் ஒரு நூல் செய்துதந்து, அந்தத் தலத்திற்றானே வசித்திருந்தார். சிலநாளைக்குப் பிறகு அவ்விடம் விட்டு நீங்கிக் காவிரி பாயுஞ் சோழநாட்டை யடைந்து திரிசிராப்பள்ளி, திருவானைக்கா முதலிய தலங்களை வணங்கிச் சென்று திருவாரூரை யடைந்து தியாகேசப் பெருமானைத் தரிசித்துத் திருவாரூர் நான்மணிமாலை என்னும் பிரபந்தத்தைப் பாடினர். அதன்பிறகு திருக்கைலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்துக் குருமூர்த்திகளாகிய மாசிலாமணித் தேசிகர் பெருமையைக் கேள்விப்பட்டு அவ்விடஞ் சென்று அவரை வணங்கி அவர் அமைத்த ஆசநத்திருந்துகொண்டு அவர் வினவின வினாக்களுக்கெல்லாம் தக்க விடைசொல்லி வந்தபோது,

தேசிகர் மகிழ்ந்து புன்னகைசெய்து, திருத்தொண்டர் பெரிய புராணத்தில்,

"ஐந்துபே ரறிவுங் கண்களே கொள்ள
வளப்பருங் கரணங்க ணான்கும்
சிந்தையே யாகக் குணமொரு மூன்றும்
திருந்துசாத் துவிகமே யாக
இந்துவாழ் சடையா னாடுமா னந்த
வெல்லையி றனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துட் டிளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்."

என்னும் திருவிருத்தத்தின் அநுபவப்பயனை வினவ, வாக்குத் தடைப்பட்டது. உடனே ஆசநம்விட்டெழுந்து நின்று முருகக்கடவுள் கட்டளையை நினைத்து, தேசிகரை வழிபட்டு, "அடியேனை அடிமைகொண்டருளவேண்டும்" என்று பணிவொடு பிரார்த்திக்க, தேசிகர் இவரை நோக்கி, "நீ காசியாத்திரை செய்து மீள்வையாயின் அநுக்கிரகிப்போம்" என்று கூற, "காசியாத்திரை செய்து மீளுமளவும் இந்தச் சரீரம் நிலையல்லவே, பரம தயாளு!" என்று மீட்டும் பணிந்துநிற்க, தேசிகர் இவரது பக்திக் கிரங்கி, "அப்படிச் செய்வது உனக்கியலாதாயின், "சிதம்பர க்ஷேத்ரத்தை யடைந்து சுவாமி தரிசநம் பண்ணிக்கொண்டு ஒரு மண்டலம் அங்கு வாசம் பண்ணிப் பின்னர் வா" என்று கட்டளையிட்டருளினர்.

குமரகுருபரரும் அந்தக் கட்டளையைச்சிரமேற்கொண்டு புறப்பட்டு, திருப்புள்ளிருக்குவேளூரை யடைந்து, கோயிலில் பிரவேசித்து, வைத்தியநாத சுவாமியையும், தையனாயகியம்மையையும், முத்துக்குமார சுவாமியையும் தரிசித்து

வணங்கித் துதித்து, அந்தத் தலத்தின் எல்லையைக் கடந்து செல்லும்போது, முத்துக்குமாரசுவாமி அருச்சகராய் எழுந்தருளி விபூதி கொடுத்து, "நம்மீது ஒரு பிள்ளைத்தமிழ் பாடக்கடவை" என்று கட்டளையிட்டு மறைந்தார். உடனே, தோன்றி மறைந்தவர் முருகக்கடவுளேயென்று தெளிந்து, மீண்டு அவ்வெல்லையை யடைந்து "எவ்வாறு பாடுவேன்" என்று நினைக்கும்போது, அந்தக் கடவுளுடைய திருவருளால் "பொன்பூத்த குடுமி" என்று ஒரு அசரீரி வாக்குண்டாக, அதனையே முதலாகக் கொண்டு முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் என்னும் பிரபந்தத்தைப் பாடி முடித்து அக்கடவுள் சந்நிதியில் அரங்கேற்றி அந்தத் தலத்தில் வசித்திருந்தார்.

சிலநாள் கழிந்தபின், சீகாழியைத் தரிசித்து, சிதம்பரத்தை யடைந்து சுவாமி தரிசனம் செய்துகொண்டிருக்குங் காலத்தில், சிதம்பர மும்மணிக்கோவை என்னும் பிரபந்தம் பாடினர். இவர் தினந்தோறும் சுவாமி தரிசனத்துக்குப் போகும் வழியில் ஒரு புராணப் பிரசங்கி இவரை மதியாதிருப்பதை அவ்விடத்தர் கண்டார். சிலர், பிரசங்கியை நோக்கி, "இவர் கல்வியறிவொழுக்கங்களுக்கும் சிவபக்திக்கும் இலக்கா யிருப்பவரன்றோ; இவரை நீர் மதியாதிருப்பதற்குக் காரணம் யாது?" என்று வினவ, "இவர் வரகவிதானே, இலக்கணக்கவியல்லவே" என்று கூற, அதை இவர் கேள்விப்பட்டு, அந்தப் பிரசங்கியார் முதலிய எல்லாருக்கும் தமது இலக்கணப்புலமை விளங்கும்படி, சிதம்பரச் செய்யுட்கோவை என்னும் பிரபந்தம் பாடினர். அதைக் கண்ட பிரசங்கி மனமகிழ்ந்து கொண்டாடினபிறகு, சிவகாமியம்மை

இரட்டைமணிமாலை என்னும் பிரபந்தத்தையும் இயற்றினர். இப்படி ஒரு மண்டலம் வரையில் அந்தத் தலத்தில் வசித்துப் பிறகு தருமபுரம் சேர்ந்து ஞானாசிரியரைத் தரிசித்து, அவர் மீது, பண்டார மும்மணிக்கோவை என்னும் பிரபந்தம் பாடி அவர் சந்நிதானத்தில் அரங்கேற்றினர். தேசிகர் மனங் கனிந்து, இவர்க்கு காஷாயாதி சிவசின்னங்களை யருள்செய்து ஞானோபதேசமுஞ் செய்தருளினர். அதைப் பெற்று அவ்விடத்தில் வசிக்கும்போது, முன்னே தமக்குப் பரிசாகக் கிடைத்த திரவியங்களை ஞானாசாரியர் சந்நிதியில் வைத்து ஏற்றருளும்படி பிரார்த்திக்க, அவர் முன் கட்டளையிட்டவாறே "காசிக்குச் சென்று அவ்விடத்தில் தர்மவிஷயத்தில் இவற்றை உபயோகிக்கக்கடவை" என்று நியமித்தருளினர். அப்படியே வழியிலுள்ள திருக்காஞ்சி, திருக்காளத்தி முதலிய தலங்களை வணங்கிச் சென்று, காசியை யடைந்து, விசுவநாத சுவாமியையும் விசாலாக்ஷியம்மையையும் வணங்கிக் காசிக் கலம்பகம் என்னும் ஒரு பிரபந்தத்தைப் பாடினர்.

அக்காலத்தில் அந்த நகரத்தை ஆண்டுகொண்டிருந்த டில்லி பாதுஷாவைக் கண்டு பேசித் தருமஞ் செய்தற்கு வேண்டிய இடம்பெற விரும்பி, அவன் பாஷையைத் தமக்கு அருள் செய்யும்படி சரஸ்வதியைப் பிரார்த்தித்து, சகலகலா வல்லிமாலை என்னும் பிரபந்தம் ஒன்பது பாடல் பாடியும் அருள்செய்யா திருக்கக்கண்டு,

"மண்கண்ட வெண்குடைக் கீழாக மேற்பட்ட மன்னருமென்
பண்கண் டளவிற் பணியச்செய்வாய்,....."

என்னும் பத்தாவது பாடலைப் பாடினவுடன், சரஸ்வதி அருள் சுரந்து அந்தப் பாஷையைச் சுவாமிக்கு நன்கு விளக்கியருள, அதைக் கொண்டு அரசனோடு பேசி, இடையே பரீக்ஷை செய்யவந்த துருக்கரையும் சில அற்புதங்களால் வாயடக்கி, தமக்கு வேண்டிய இடம் கேதாரகட்டத்திற் பெற்று அதில் ஒரு மடங் கட்டினர். அதற்குக் குமாரசுவாமி மடம் என்று பெயர்.

குமரகுருபரசுவாமிகள் அந்த மடத்திலே யெழுந்தருளி யிருந்துகொண்டு, திருமலைநாயகர் கொடுத்த திரவியத்தைக் கொண்டு அவர் பெயரால் ஒரு சத்திரம் கட்டுவித்துத் தரும பரிபாலனம் செய்ததன்றியும், கேதாரநாதருக்கும் ஒரு ஆலயம் அமைத்து, விதிப்படி நித்திய நைமித்திகங்களை ஏற்படுத்தி, காலந்தோறும் தரிசனம் செய்துகொண்டு அந்தத் தலத்தில் வசித்திருந்தார். ஒருநாள் தமது ஞானசிரியரைத் தரிசிக்கவேண்டுமென்னும் விருப்ப மிகுதலும், கேதாரநாதரையும் விசுவநாதரையும் வணங்கி விடைபெற்று, தருமபுரத்தை யடைந்து ஞானசாரியரைத் தரிசித்து வணங்கித் துதித்துத் திருவருள் பெற்று சிலநாள் அங்கு வசித்து, மறுபடியும் காசியை யடைந்தனர். இப்படி மூன்றுமுறை வந்து தரிசித்துச் சென்று, நான்காமுறையில் ஞானசிரியருடைய சந்நிதியில்நின்று, "இனி அடியேனுக்கு எம்பெருமானுடைய தரிசனத்தை விட்டு நீங்கிக் காசியிலிருக்க மனமில்லை" என்று விண்ணப்பஞ் செய்யக்கேட்ட ஞானசாரியர், பிரிவாற்றாமையால் வருந்துகின்ற இவரை நோக்கி,

"காட்டிருந் தாலு மலையிருந் தாலுங் கருதரிய
நாட்டிருந் தாலு நமக்கென்ன காணல்ல தோர்கமலை
வீட்டிருந் தாண்டருள் ஞானப்ர காசன் விரைமலர்த்தாள்
கேட்டிருந் தாலும் பிறவா நெறிவந்து கிட்டிடுமே."

என்னும் பாட்டை யருளிச்செய்து, சொக்கலிங்கமூர்த்தியை யும் மீனாக்ஷியம்மையையும் கிரியாபூசையாக எழுந்தருளப் பண்ணிக்கொடுத்து, திருவருள் புரிந்து விடை கொடுத் தருளினர். குமரகுருபரசுவாமிகள் ஞானசாரியருடைய ஆணை யைச் சிரமேற்கொண்டு காசியை யடைந்து அருமையாகிய சிவதருமங்களைச் செய்துகொண்டு சிவாநுபூதிச் செல்வராய்ச் சிலகாலம் வீற்றிருந்து சிவபெருமானது திருவடிநீழலை யடைந்தார்.

இவ்வாசிரியர் வரலாற்றைப் பின் வரும் சிறப்புப்பாயிரச் செய்யுளானும் அறிக.

சிறப்புப்பாயிரம்.

திருமக ளகலாப் பரமவை குந்த
நன்னக ருதித்த செந்நெறிக் குரிசில்
ஐந்தெனும் பருவம் வந்துறு மளவும்
மழக்குண மொருவி மிழற்றிடாச் செம்மல்
செந்திலம் பதிவாழ் கந்தன தருளால்
ஓதா துணர்ந்த போதனாய் முன்னர்க்
கலிவெண் பாவெனு மொலிபெறு மலங்கலக்
குன்றிரு முடிதனக் குகந்திடச் சூட்டிப்
பிள்ளைக் கவிமுதல் வெள்ளைக் கிழத்தி
மாலையீ றாகச் சால்பமை பிரபந்த
மூன்னான் கியற்றித் தன்னுஞ் சமய
நிலையையுங் காட்டி யுலைவிலா தியாருந்
தீதெலா மொருவி நீதியே புரிய
நீதிநெறி விளக்கமென் றேதமில் பனுவலு
மியற்றின னில்லறந் தியக்குறு நிலையென
விளமையிற் றுறந்து வளமைசேர் தருமை
மாசிலா மணியெனுந் தேசுறு குரவன்
பதமலர் பழிச்சுமற் புதகுண குமர
குருபர னெனும்பெயர் மருவிய முனியே.

உ

ஸ்ரீ ஸரஸ்வத்யைநம:

சகலகலாவல்லிமாலையென்னும்

# சரசுவதி தோத்திரம்

## மூலமும் உரையும்.



[சகலகலாவல்லி யென்பது சகல கலைகளாகிய மலர்கள் மலர்ந்த கொடிபோன்றவள் எனப் பொருள்படுதலால் வல்லியென்பது அடையடுத்த உவமையாகுபெயர். கலா என்னும் வடமொழிக்கு பாஷையென்பது பொருளாதலால் உலகிலுள்ள எல்லாப் பாஷைகளுக்கும் அதிதேவதையென்க. இந்த மாலைக்கு சரசுவதி தோத்திரம் என்னும் ஒரு பெயர் வழங்கும். மாலா என்னும் வடசொல் மாலையெனத் திரிந்து வந்தது; அது இங்குப் பாமாலையை யுணர்த்தும். ஓரளவுளதாக நிரல்படக் கோக்கும் பூமாலைபோலுதலால் இதற்கும் மாலையென்னும் பெயர் வாய்ந்தது. சகலகலாவல்லிக்குச் சூட்டப்படும் பாமாலையெனப் பொருள்படுதலால் சகலகலாவல்லிமாலை யென்பது நான்காம்வேற்றுமை யுருபும் பயனு முடன்றொக்கத் தொகை.]

கட்டளைக்கலித்துறை.

வெண்டா மரைக்கன்றி நின்பதந் தாங்கவென் வெள்ளையுள்
தண்டா மரைக்குத் தகாதுகொ லோசக மேழுமளித் [ளத்
துண்டா னுறங்க வொழித்தான்பித் தாகவுண் டாக்கும்வண்
கண்டான் சுவைகொள் கரும்பே சகல கலாவல்லியே. [ணந்

(பதவுரை.) சகம் ஏழும் அளித்து - உலகங்களேழையும் காப்பாற்றி, உண்டான் - (இறுதிக்காலத்தில் அவற்றை) உண்டவனாகிய திருமால், உறங்க - நித்திரை செய்யவும், ஒழித்தான் - சங்கரித்தவனாகிய சிவபிரான், பித்து ஆக - பைத்தியங் கொள்ளவும், உண்டாக்கும் வண்ணம் கண்டான்-படைக்கும் விதத்தைக் கண்டவனாகிய பிரமன், சுவை கொள்-சுவையாகக்கொண்டு நுகர்கின்ற, கரும்பே-கரும்பே! சகலகலாவல்லியே - சகலகலாவல்லி யென்னும் திருநாமமுடையவளே! நின் பதம் - உன் திருவடியை, தாங்க - சுமப்பதற்கு, வெள் தாமரைக்கு அன்றி - வெண்டாமரை மலருக்கே யல்லாமல், என் - எனது, வெள்ளை உள்ளம் - வெளிற்று மனமாகிய, தண் தாமரைக்கு-குளிர்ந்த தாமரை மலருக்கு, தகாது கொல்-தகாதோ.

(பொழிப்புரை.) உலகங்களேழையும் காப்பாற்றி (இறுதிக்காலத்தில் அவற்றை) உண்டவனாகிய திருமால் நித்திரை செய்யவும், சங்கரித்தவனாகிய சிவபிரான் பைத்தியங்கொள்ளவும், படைக்கும் விதத்தைக் கண்டவனாகிய பிரமன் சுவையாகக்கொண்டு நுகர்கின்ற கரும்பே! சகலகலாவல்லி யென்னும் திருநாம முடையவளே! உன் திருவடியைச் சுமப்பதற்கு வெண்டாமரை மலருக்கே யல்லாமல், எனது வெளிற்று மனமாகிய குளிர்ந்த தாமரைமலருக்குத் தகாதோ.

(கருத்துரை.) பிரமன் சுவைக்குங் கரும்பே! உன் திருவடியை வெண்டாமரை மலரன்றி என் மனமாகிய தண்டாமரை மலர் சுமத்தல் தகாதோ.

(விசேடவுரை.) இம்மாலை கட்டளைக்கலித்துறையா னியன்றது. கலித்துறையாவது: கலிப்பாவின் இனமாகிய கலித்துறை, கலித்தாழிசை, கலிவிருத்தம் என்னும் மூன்றனு ளொன்று. கலித்துறையாவது : ஐஞ்சீரடி நான்கினைக்கொண்டு வருவது; இது காப்பியக் கலித்துறை, கட்டளைக் கலித்துறை என இருவகைப்படும்; அவற்று ளொன்றாகிய இக்கட்டளைக் கலித்துறையானது, முதற்சீர் நான்

கும் வெண்டளைபிழையாமல் கடையொருசீர் விளங்காயாகி, நேரிசை முதலானல் ஓரடிக்குப் பதினறெழுத்தும், நிரையசை முதலானல் ஓரடிக்குப் பதினேழெழுத்தும் பெற்றுவரும்.

தாமரை - பொருளாகுபெயர், முதலாகுபெயர் எனினுமாம்; இது தாமரஸம் என்னும் வடமொழித்திரிபு. இது வெண்மை யென்னும் பிறிதினியையு நீக்கிய விசேடணம் பெற்றுவந்தது. சரஸ்வதி வீற்றிருக்கும் மலர் வெண்டாமரையும், இலக்குமி வீற்றிருக்கும் மலர் செந்தாமரையும் என அறிக. மேலும் சரஸ்வதியின் உடை, பூண் முதலிய பிறவும் வெண்மைநிற முடையன. இதனை,

"வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமலத்தின் வீற்றிருப்பாள்......"

என்ற காளமேகப்புலவர் வெண்பாவா னுணர்க. பாதம் என்னும் வடமொழி பதம் எனக் குறுகின்றது. 'நின் பதம்' வேற்றுமைப் புணர்ச்சியாயினும் "நின்னீறியல்பா முறவே" என்னும் நன்னூல் சூத்திர விதிப்படி னகரம் இயல்பாய் வந்தது. வெள்ளையுள்ளம் - வஞ்சனை முதலிய துர்க்குணங்க ளில்லாத மனம். புறத்தே யிருக்கிற வெண்டாமரை மலரி லிருப்பதுபோல அகத்தே யிருக்கிற வெண்டாமரை மலரி லிருக்கத் தகாதோ? அன்றியும், புறத்தாமரை மலருக்குள்ள தண்மையினும் என் அகத்தாமரை மலருக்கு மிகு தண்மையுண்டன்றே; அது நோக்கியேனும் நின் திருவடியை யெளியேனது அகத்தாமரை மலரின்மீது வைத்தருளத் தகாதோ என்கிருர். 'தகாது கொல்லோ' என்பதில் கொல் ஐயம்; ஓ - வினு. 'சகம்' என்பதற்குத் தோன்றி யழியும் இயல்புடையது என்பது பொருள். பொதுப்படச் சகமேழும் என்றமையால், மேலுலக மேழும், கீழுலக மேழுங் கொள்க. மேலுலகேழாவன: பூலோகம், புவலோகம், சுவலோகம், சனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம் என்பன. கீழுலகேழாவன: அதலம், விதலம், சுதலம், தராதலம், இரசாதலம்,

மகாதலம், பாதாளம் என்பன. பூலோகத்தை மத்தியலோகம் என்று கூறுதலும் உண்டு. சகமேழும் என்பதில் உம்மை முற்றும்மை. திருமால் ரக்ஷக கர்த்தா ஆதலால் 'அளித்து' என்றும், எல்லா வுலகங்களையும் மஹாப்ரளயத்திலே தமது திருவயிற்றி லடக்கிவைப்பவராதலால், 'உண்டான்' என்றும், அடக்கினபின்பு திருப்பாற்கடலில் ஆலிலையின்மீது அறிதுயி லமர்தலால் 'உறங்க' என்றுங் கூறினர். உருத்திரமூர்த்தி சங்கார கர்த்தா ஆதலால் அவரை 'ஒழித்தான்' என்றும், அவர் கொண்டது பித்தர் கோலமாதலால் 'பித்தாக' என்றும் கூறினர். பித்தர் கோலமாவது: சர்ப்பாபரணம், சாம்பற்பூச்சு, எருக்க மலர்மாலை முதலியவற்றை யுடைத்தாதல். மும்மூர்த்திகளில் ஒருவரைத் தூங்குமூஞ்சியாகவும், மற்றொருவரைப் பித்தராகவும் கூறினது யாதுக்கெனின், தாம் பாமாலை சூட்டப்போகிற வெள்ளைக்கிழத்திக்கு ப்ராணநாயகனாகிய பிரமதேவனைச் சிறப்பித்துப் புகழ்தற்கென்க. பிரமனைப் புகழும் வகையாவது: படைத்தாலன்றோ படைத்த பொருளை அளிக்கவும் அழிக்கவுங் கூடும். படைக்காவிட்டால் இவ்விருதொழிலும் நிகழாவென்பது தோன்ற, 'உண்டாக்கும் வண்ணங் கண்டான்' எனப் பிரமனைச் சிறப்பித்தார். இத்தன்மைச் சிறப்பினை யுடையனாகிய பிரமன், 'சுவைகொள் கரும்பே' என்றமையால் அவனும் தேவியுடைய வசப்பட்டவனாய் அவளுடைய லாவண்யாதிசயத்தி லீடுபடுகின்றான் எனத் தேவியையும் இம்மூவரினும் உயர்த்திக் கூறினாராயிற்று. உண்டான், ஒழித்தான், கண்டான் என்பன ஈறு திரியாத இறந்தகால வினையாலணையும் பெயர்கள். உறங்க ஆக என்பன செயவெனெச்சங்கள். சுவைகொள் கரும்பு - உருவகம். உன் ப்ராணநாதன் சிருஷ்டித்த ப்ரபஞ்சத்தைத்தானே திருமால் காப்பதும், உருத்திரன் அழிப்பதும், அத்தகைச் சிறப்புடையவன் தேவியாதலால் நீயெம்மனோர் வேண்டிய வேண்டியாங் கருள்செய்யவல்லையெனத் தமது காரியத்தில் அடியிடுகிறார் இம்முதற்பாட்டில். என்னை; ஒருவரிடத் தொருபொருளைப் பெறவிரும்புவோர், அவரை

முன்னே இன்சொல்லால் விளித்து, ஆசநத்திருத்தி உபசரித்தன்றோ அதனைப் பெறுவதுபோல, இவரும், 'சுவைகொள் கரும்பே' என விளித்து, தம்முள்ள வெள்ளைத்தண்டாமரையைத் தவிசாக்கி அதிலெழுந்தருளும்படி வேண்டுதலானென்க. சரஸ்வதி கல்விக் கதி தேவதையாகலின் கலைமகள், பனுவலாட்டி, இசைமடந்தை, வாணி என்றும், வெண்ணிற முடையவளாதலால் வெள்ளை மெய்யாள் என்றும் சொல்லப்படுவாள்.

சரஸ்வதிதேவியார்க்கு வழங்கும் பல திருநாமங்களை,

"பாரதிவாணி - பனுவலாட்டி
வெண்டாமரையாள் - வெள்ளைமேனியாள்
நான்முகன்கிழத்தி - நாமகள் கலைமகள்
உலகமாதா - ஊர்புரவாகனி
ஞானமூர்த்தி - நற்பாமடந்தை
சாவித்திரியே - காயத்திரியென
வாக்கின் செல்வியை - நோக்கிய பெயரே."

என்னுந் திவாகரத்தானும்,

"நாமகள் பாரதி வாணி கலைமகள்
பூமகன் றேவியாம்............"

என்னும் உரிச்சொல் நிகண்டானும்,

"கலைமகள் பனுவ லாட்டி சாயத்திரி ஞான மூர்த்தி
யுலகமா தாபி ராமி யொள்ளிய வெள்ளை மெய்யா
ளிலகுவெண் சலச முற்றாள் பாரதி யிசைம டந்தை
மலரயன் மனைவி வாக்காள் வாணிநா மகள்பே ராமே."

என்னும் சூடாமணி நிகண்டானு முணர்க. (௩)

நாடும் பொருட்சுவை சொற்சுவை தோய்தர நாற்கவியும்
பாடும் பணியிற் பணித்தருள் வாய்பங்க யாசநத்திற்
கூடும் பசும்பொற் கொடியே கனதனக் குன்றுமைம்பாற்
காடுஞ் சுமக்குங் கரும்பே சகல கலாவல்லியே.

(ப - ரை.) பங்கயம் ஆசநத்தில்-தாமரை மலராகிய ஆசநத்தில், கூடும் - சேர்ந்திருக்கிற, பசு - பசுமையாகிய, பொற்கொடியே-பொற்கொடி போல்வாளே! கனம் - பருத்த, தனம் குன்றும் - கொங்கைக் குன்றினையும், ஐம்பால் காடும் - கூந்தற் காட்டினையும், சுமக்கும் - தாங்கிக்கொண்டிருக்கிற, கரும்பே - கரும்பு போல்வாளே! சகலகலாவல்லியே—! (அறிஞரால்) நாடும்-ஆராயப்படுகிற, பொருள் சுவை-பொருட்சுவையும், சொற்சுவை - சொற்சுவையும், தோய்தர - பொருந்தியிருக்க, நால் கவியும்-நாற்கவியையும், பாடும்-பாடுதற்குரிய, பணியின் - திருத்தொண்டில், பணித்து அருள்வாய் - அடியேனை நியமித்தருளக்கடவை.

(பொ - ரை.) தாமரை மலராகிய ஆசநத்தில் சேர்ந்திருக்கிற பசுமையாகிய பொற்கொடி போல்வாளே! பருத்த கொங்கைக் குன்றினையும் கூந்தற் காட்டினையும் தாங்கிக்கொண்டிருக்கிற கரும்பு போல்வாளே! சகலகலாவல்லியே! (அறிஞரால்) ஆராயப்படுகிற பொருட்சுவையும் சொற்சுவையும் பொருந்தியிருக்க நாற்கவியையும் பாடுதற்குரிய திருத்தொண்டில் அடியேனை நியமித்தருளக்கடவை.

(க - ரை.) கமலாலயி! நாற்கவியினாலும் உன்னைப் பாடும்படியான திருத்தொண்டில் என்னை யமைத்தருள்வாய்.

(வி - ரை.) பொருட்சுவை - நவரசங்களு மமைந்திருப்பது. சொற்சுவை - நவின்றோர்க் கினிமையும் திரிசொற்களும் திசைச்சொற்களும் மிகுதியாய்க் கலவாமையும். தோய்தர என்னும் செயவெனெச்சத்தில் பகுதி தோய்தா. நாற்கவியாவன - ஆசு, மதுரம், சித்தி

ரம், வித்தாரம் என்பன. பங்கஜம் என்னும் வடமொழி பங்கயமென்ருயிற்று; இதற்கு, சேற்றில் முளைப்பது என்பது பொருள். முடியிட்டு ஒரு பக்கம் செருகப்படுவதாகிய கொண்டையெனவும், பின்னே செருகப்படுவதாகிய சுருள் என்றும், சுருட்டி முடிக்கப்படுவதாகிய குழல் என்றும், பின்னி முடிக்கப்படுவதாகிய பனிச்சையென்றும், உச்சியில் சேர்த்து முடிக்கப்படுவதாகிய முடி என்றும், ஐந்து பகுதியாய்ப் பகுத்துக் கூறப்படுதலால் கூந்தலை 'ஐம்பால்' என்ருர். ஐம்பால் - பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர்-'தனக்குன்று, ஐம்பாற்காடு' உருவகமாதலால் இரு பெயரொட்டுப் பண்புத்தொகைகள். தனக்குன்று - பொன்மலையெனினு மமையும். 'காடு' என்றது மயிர்ச்செறிவு தோன்றற்கென்க. பால் - பகுப்பு. பணித்தருள்வாய் - ஏவலொருமை வினைமுற்று; பணித்தருள் - பகுதி; வ் - உடம்படு மெய்யல்லாத சந்தி; ஆய் - ஏவலொருமை வினைமுற்று விகுதி. பங்கயாசனம்-தீர்க்கசந்தி. கரும்பே சகல என்னும் தொடரில் "ஈற்றியா விஞவிளிப் பெயர்முன்வலி யியல்பே" என்ற விதிப்படி வல்லினம் இயல்பாயிற்று. தேவியார் இவரது நாவிற்கு மிகவு மின்சுவை பயத்தலால், மேற்பாட்டிற் கூறிய தமையாது இப்பாட்டினும் 'கரும்பே' என்ருர். (உ)

அளிக்குஞ் செந்தமிழ்த் தெள்ளமு தார்ந்துன் னருட்கடலிற், குளிக்கும் படிக்கென்று கூடுங்கொ லோவுளங் கொண்டு தெள்ளித், தெளிக்கும் பனுவற் புலவோர் கவிமழை சிந்தக்கண்டு, களிக்குங் கலாப மயிலே சகல கலாவல்லியே.

(ப - ரை.) உள்ளம் கொண்டு - மனங்கொண்டு, தெள்ளித் தெளிக்கும் - கொழித்துத் தெளிவிக்கின்ற, பனுவல் - நூலாராய்ச்சியையுடைய, புலவோர் - புலவர்கள், கவி மழை சிந்தக் கண்டு - கவி மாரி பொழியக்கண்டு, களிக்கும் - களிக்கின்ற, கலாபம்-தோகையை

யுடைய, மயிலே - மயில்போல்வாளே! சகலகலாவல்லியே—! அளிக்கும் - உன்னால் தந்தருளப்பட்ட, செழும் தமிழ் - செழுந்தமிழாகிய, தெள் அமுது - தெளிவாகிய அமிர்தத்தை, ஆர்ந்து - உண்டு, உன் - உனது, அருள் கடலில் - க்ருபாசமுத்ரத்தில், குளிக்கும்படிக்கு-மூழ்கும்படிக்கு, என்று கூடுங்கொலோ - எந்நாள் எனக்குக் கூடுமோ?

(போ - ரை.) மனங்கொண்டு சொழித்துத் தெளிவிக்கின்ற நூலாராய்ச்சியையுடைய புலவர்கள், கவிமாரி பொழியக்கண்டு களிக்கின்ற தோகையையுடைய மயில்போல்வாளே! சகலகலாவல்லியே! உன்னால் தந்தருளப்பட்ட செழுந் தமிழாகிய தெளிவாகிய அமிர்தத்தை உண்டு உனது க்ருபாசமுத்ரத்தில் மூழ்கும்படிக்கு எந்நாள் எனக்குக் கூடுமோ?

(கு - ரை.) புலவர் கவிமழை பொழியக்கண்டு களிக்கும் மயில் போல்வாளே! செழுந் தமிழாகிய அமிர்தத்தை யுண்டு உன் அருட் கடலிற் குளிக்க எனக் கென்று கூடுமோ?

(வி - ரை.) அளிக்கும் என்பதற்கு இன்பத்தைத் தருகிற, திருவாய்மொழி தேவாராதிகளால் உயிர்க்குறுதியைத் தருகிற,புலவருக்கு இம்மை மறுமை யின்பங்களைத் தருகிற, என மூவகையாய்ப் பொருள் கூறிக் கோடலமையும். தமிழ் என்பதற்கு இனிமை யென்பது பொருளாதலாலும், "செந்திறத் தமிழோசை வடசொல்லாகி என்றும், பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங் கொண்டலே" என்றும் சிறப்பித்தற் குரியதாதலாலும் அதனை, 'செழுந்தமிழ்' என்றார். பாண்டிவள நாட்டில் வழங்கிய தமிழைச் செந்தமிழ் என்றும், தென் பாண்டி - குட்டம் முதலிய பன்னிரண்டு நாடுகளில் வழங்கும் தமிழைக் கொடுந்தமிழ் என்றும் கூறுவர்; இவற்றை நன்-பெயர்-14, 16-சூத்திரவுரையிற் காண்க. செழுந்தமிழ்த் தெள்ளமுது உருவகம். தெள் அமுது - பண்புத்தொகைநிலைத்தொடர். ஆர்ந்து - இறந்தகால வினையெச்சம். அருட்கடலில் குளித்தலாவது பூர்ண க்ருபையைப்

பெற்று இன்புறுதல். தெளித்தல் - ஐயந்திரிபுகளை யொழித்தல். தெளிக்கும் என்னும் செய்யுமென்வாய்பாட்டுப் பெயரெச்சத்தில் பிறவினை விகுதியாகிய வி தொகுத்தல். பனுவல் - பஞ்சினூல், இது போறலால் கல்வி நூல்களுக்கும் இப்பெயர் வாய்ந்தது. புலவோர் - பண்படியாகப் பிறந்த பெயர்ப்பகுபதம்; புலம் அல்லது புலமை - பகுதி, அர் விகுதியின் அகரம் ஒகாரமாகத் திரிந்ததற்கு விதி "பெயர்வினை யிடத்து னளரய வீற்றயல், ஆ ஓ வாகலும் செய்யுளு ளுரித்தே" என்னும் சூத்திரத்தின் உபலக்கண மென்க. கண்டு களிக்கும் என்பதில் ககரம் பொதுவிதிப்படி மிகாமல் "வன்றொட ரல்லன முன்மிகா வல்வழி" என்னும் சிறப்புவிதிப்படி இயல்பாயிற்று. 'புலவோர் கவிமழை சிந்தக்கண்டு, களிக்குங் கலாபமயிலே' என்றமை யால் புலவோரை மேகமாக வுருவகஞ் செய்துகொள்க. இது ஏக தேசவுருவகம். (௩)

தூக்கும் பனுவற் றுறைதோய்ந்த கல்வியுஞ் சொற் சுவை தோய், வாக்கும் பெருகப் பணித்தருள் வாய்வட நூற்கடலுந், தேக்குஞ் செழுந்தமிழ்ச் செல்வமுந் தொண் டர்செந் நாவினின்று, காக்குங் கருணைக் கடலே சகல கலா வல்லியே.

(ப - ரை.) வட நூல் கடலும் - வடநூலாகிய கடலும், தேக்கும் - நிறைந்த, செழும் தமிழ் செல்வமும் - செழுந்தமிழாகிய செல்வமும், தொண்டர் - உன் அடியார்களுடைய, செம் நாவில் நின்று - செவ்விய நாவினிடத்து நின்று, காக்கும் - அவரைக் காக்கின்ற, கருணைக்கடலே - க்ருபாசமுத்ரமே! சகலகலாவல்லியே—! தூக்கும்-சீர் தூக்கப்படுகிற, பனுவல் துறை தோய்ந்த - பல நூற்றுறைகளிற் படிந்த, கல்வியும் - வித்தையும், சொற்சுவை தோய் - சொற்சுவை பொருந்திய, வாக்கும் - வாக்கும், பெருக-பெருகும்படி, பணித்தருள் வாய் - நியமித்தருள்வாயாக.

(பொ - ரை.) வடநூலாகிய கடலும், நிறைந்த செழுந்தமிழா கிய செல்வமும், உன் அடியார்களுடைய செவ்விய நாவினிடத்து நின்று அவரைக் காக்கின்ற க்ருபாசமுத்ரமே! சகலகலாவல்லியே! சீர் தூக்கப்படுகிற பல நூற்றுறைகளிற் படிந்த வித்தையும், சொற் சுவை பொருந்திய வாக்கும் பெருகும்படி நியமித்தருள்வாயாக.

(க - ரை.) கருணாசாகரமே! எனக்கு நல்ல வித்தையும் வாக் கும் பெருக வுண்டாகும்படி நியமித்தருள்வாயாக.

(வி - ரை.) தூக்கும் என்பதைப் பெயர்ச்சொல்லாகவும் உம் மையை யெண்ணும்மையாகவுங் கொண்டு பாட்டும் என்றுரைப்பினு மாம். துறை தோய்ந்த கல்வி யென்றது தர்க்க வ்யாகரண கணித ஜோதிஷாதி நூல்களைக் கற்றலை. சொற்சுவை தோய் வாக்கு-படிப்ப வர்க்கு இனிதாய நடை. வடமொழி எல்லாப் பாஷைகளுக்கும் ஆதி யாயும் விஸ்தாரமாயு மிருத்தல் நோக்கி 'வடநூற் கடல்' என்றார். தமக்குரியது தமிழாதலால் அதனைத் 'தமிழ்ச் செல்வமும்' எனப் புகழ்வாராயினர். தொண்டர் - தொண்டு செய்வோர். தொண்டு-பணி விடை. (உபசாரம் - கைங்கரியம்). அவர் பாடின பதிகங்களும் பாசு ரங்களும் செம்பாகமா யிருத்தலால் அவரது நாவைச் 'செந்நா' என் றார். நின்று - நிற்கவெனச் செயவெனெச்சத் திரிபு; செய்தெனெச்ச மாகவே கொண்டு தொண்டர் செந்நாவினின்று வடநூற்கடலும் தமிழ்ச்செல்வமும் காக்கும் என்று அந்வயித்து அன்பரது செந்நாவி லிருந்துகொண்டே வடநூற்கடலையும் செல்வத்தையும் குறையாமற் காக்கின்ற எனப் பொரு ளுரைப்பினு மமையும். 'தொண்டர் செந் நாவினின்று காக்கும் கருணைக்கடலே' என்றமையால் தொண்டரிட த்தே கருணையுள்ளவள் என்பது தோன்றுமாறு காண்க. தொண்டர்- பண்படியாகப் பிறந்த பலர்பாற் படர்க்கைப்பெயர்; பகுதி-தொண்டு. நாவில் நின்று என்பது நகரம் திரிய லகரம் கெட்டுப் புணர்ந்தது; சூத்திரம்: "குறில்செறி யாலள வல்வழி வந்த, தகரம் திரிந்தபிற் கேடும் ஈரிடத்தும், வருநத் திரிந்தபின் மாய்வும் வலிவரின், இயல்பும்

திரிபு மாவன வுளபிற." நாவினின்று காத்தலாவது - அமங்கலங்கள் அமையப்பெறுமலும், மனம் பிறவழியிற் செல்லாமலும் தடுத்தல். உம்மைகள் எண்ணுப்பொருளன. வடமொழியும் மிருதியாய்த் தமிழிற் பயின்று வருதலால் 'வடநூற் கடலும் தேக்குஞ் செழுந்தமிழ்ச் செல்வமும்' என்றார். பிரமனது நாவில் நிற்பதே யன்றிக் கற்றோர் நாவிலும் நிற்கும் காரணம்பற்றிச் சரஸ்வதி நாமகள் எனப்படுவள். ()

பஞ்சப் பிதந்தரு செய்யபொற் பாதபங் கேருகமென்
னெஞ்சத் தடத்தல ராததென் னேநெடுந் தாட்கமலத்
தஞ்சத் துவச முயர்த்தோன்செந் நாவு மகமும்வெள்ளைக்
கஞ்சத் தவிசொத் திருந்தாய் சகல கலாவல்லியே.

(ப - ரை.) நெடு - நெடிய, தாள் - நாளத்தையுடைய, கமலத்து - தாமரைமலரை யாசனமாகவுடைய, அஞ்சம் துவசம் உயர்த்தோன் - அன்னக்கொடியை யுடையவனுகிய பிரமனது, செம் நாவும் - செவ்விய நாவினிடத்தும், அகமும் - அவன் மனத்தினிடத்தும், வெள்ளைக் கஞ்சம் தவிசு ஒத்து இருந்தாய் - வெண்டாமரை மலராகிய ஆசனம்போலக் கொண்டு வீற்றிருந்தவளே! சகலகலாவல்லியே—! பஞ்சு அப்பு - செம்பஞ்சு ஊட்டப்பெற்ற, இதம் தரு-நன்மையைத் தருகிற, செய்ய பொன் பாதம்-செவந்த அழகிய திருவடியாகிய, பங்கேருகம்-தாமரைமலரானது, என்-எனது, நெஞ்சம் தடத்து-மனமாகிய தடாகத்தில், அலராதது - மலராமைக்குக் காரணம், என்னே - யாதோ (அறிந்திலேன்).

(பொ - ரை.) நெடிய நாளத்தையுடைய தாமரைமலரை யாசனமாகவுடைய அன்னக்கொடியை யுடையவனுகிய பிமரனது செவ்விய நாவினிடத்தும் அவன் மனத்தினிடத்தும் வெண்டாமரை மலராகிய ஆசனம்போலக் கொண்டு வீற்றிருந்தவளே! சகலகலாவல்லியே! செம்பஞ்சு ஊட்டப்பெற்ற நன்மையைத் தருகிற செவந்த அழகிய திருவடியாகிய தாமரைமலரானது எனது மனமாகிய தடாகத்தில் மலராமைக்குக் காரணம் யாதோ (அறிந்திலேன்).

(க - ரை.) வெண்டாமரை மலரில் வீற்றிருப்பதுபோல பிரமனது நாவிலும் மனத்திலும் வீற்றிருப்பவளே! உன் திருவடித் தாமரை என் மனத்தடத்தில் மலராததற்குக் காரணம் யாதோ அறிந்திலேன்.

(வி - ரை.) அப்பு - வினைத்தொகை வினைச்சொல். இதம் தருதல் - அடுத்தவர்க்கு இன்பந் தருதல். செய்ய பொன் - செம்பொன் எனினுமாம். செய்ய-செம்மைப் பண்படியாகப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம். பங்கேருகம் - சேற்றில் முளைப்பது. நெஞ்சத்தடம் உருகவமாகையால்இருபெயரொட்டுப்பண்புத்தொகை. அலாதது-எதிர்மறை ஒன்றன்பால் வினையாலணையும்பெயர். என்-எவன் என்னும் குறிப்பு வினைமுற்றின் மரூஉ. ஏகார விடைச்சொல் இரக்கப்பொருளது. நீர் மிகுதியில் மலர்ந்த கமலம் என்பார் 'நெடுந்தாட் கமலம்' என்றார். ஹம்சம் என்னும் வடமொழி அஞ்சம் என்றானது தற்பவம்; இது அதன் உருவத்துக்கு ஆனமையால் முதலாகுபெயர். 'செந்நா' என்றார் மறை பயின்ற நா என்றற்கு. செம்மையை மனத்துக்குங் கூட்டுக. பாதத்துக்குச் செம்மை - பஞ்சப்புதலாகிய செந்நிறமும், மனத்துக்கு இதந்தருகையாகிய செம்மைக் குணமுமாம். பங்கேருகம் தடத்தில் அலர்வதியல்பன்றோ, அங்ஙனமாக நின் பாத பங்கேருகம் என் நெஞ்சத்தடத்தலாததென்னே என வியப்படைகின்றார்; கல் மலை முதலியவற்றில் அலராமையுந் தோன்றுகின்றது. (௫)

பண்ணும் பரதமுங் கல்வியுந் தீஞ்சொற் பனுவலும்யான்
எண்ணும் பொழுதெளி தெய்தநல் காயெழு தாமறையும்
விண்ணும் புவியும் புனலுங் கனலும்வெங் காலுமன்பர்
கண்ணுங் கருத்து நிறைந்தாய் சகல கலாவல்லியே.

(ப - ரை.) பண்ணும் = பண்களும், பரதமும்-பரதசாத்திரமும், கல்வியும் = வித்தையும், தீ சொல்-இனிய சொற்களையுடைய, பனுவ

லும் - நூலும், யான் எண்ணும்பொழுது-நான் நினைக்கும் காலத்தில், எளிது எய்த - எளிதில் பெறும்படி, நல்காய் - கிருபை செய்யக்கடவை; எழுதா மறையும் - எழுதிப் படிக்காத வேதங்களிலும், விண்ணும் - ஆகாயத்திலும், புவியும் - பூமியிலும், புனலும் - நீரிலும், கனலும் - நெருப்பிலும், வெம் காலும்-வேகமாகிய காற்றிலும், அன்பர் - அன்பர்களுடைய, கண்ணும் கருத்தும் - கண்ணிலும் கருத்திலும், நிறைந்தாய் - நிறைந்திருப்பவளே! சகலகலாவல்லியே—!

(பொ-ரை.) பண்களும், பரதசாத்திரமும், வித்தையும், இனிய சொற்களையுடைய நூலும், நான் நினைக்கும் காலத்தில் எளிதில் பெறும்படி கிருபை செய்யக்கடவை; எழுதிப் படிக்காத வேதங்களிலும், ஆகாயத்திலும், பூமியிலும், நீரிலும், நெருப்பிலும், வேகமாகிய காற்றிலும், அன்பர்களுடைய கண்ணிலும், கருத்திலும் நிறைந்திருப்பவளே! சகலகலாவல்லியே!

(க - ரை.) வேத முதலிய எல்லாவிடங்களிலும் நிறைந்திருப்பவளே! பண் பரதம் கல்வி முதலிய யாவும் நான் நினைத்த மாத்திரத்தில் எனக்கு எளிதில் புலப்படும்படி அருள் செய்யக்கடவை.

(வி - ரை.) பண் - இசைநுணுக்கம்; பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி என நான்கு. பரதம் - அபிநயங்களை (நடன முதலிய வகைகளை) உணர்த்தும் நூல்; இவ்விரண்டும் இசைத்தமிழ்க்கும் நாடகத்தமிழ்க்கும் அத்யாவசியகமானவை. கல்வி - இயற்றமிழுமாம். சொற்பனுவல் - இலக்கணநூல் எனினுமாம். எழுதா மறை - வேதம், எழுதாக் கிளவியென்றும் கூறுவர்; இது சப்தரூபமாகவே கடவுளால் அருளப்பட்டதென்றும் கூறுவர். கிளவி - சொல். ஆரியர் எழுதவும் படிக்கவும் கற்பதற்கு முன்பு கர்ணபரம்பரையாய் வழங்கிவந்த தோத்திரப் பாக்களே வேதமென்றும், அது அக்காலத்தில் எழுதாமல் வழங்கிவந்தமையால் எழுதாக்கிளவி யென்றும், எழுதாமறை யென்றும் பெயர் பெற்றதென்றும் கூறுவர். மறை = தொழிலடியாகப் பிறந்

பெயர்; மறு-பகுதி, ஐ-செயப்படுபொருள் விகுதி, உகரக்கேடு சந்தி; பிராமணரல்லாத மற்றை வருணத்தார்க்கு மறுக்கப்பட்டது என்பது பொருள். நிறைந்தாய் - விளிப்பெயராதலின் வருமொழி வல்லினம் இயல்பாயிற்று. மற்றைப் பூதங்களினும் வலியுடைத்தாதலால் அது 'வெங்கால்' எனப்பட்டது. அன்பர் கண்ணுங் கருத்துமாய் நிறைதலாவது-அவர் வரிவடிவில் வசிப்பதும், சூக்ஷ்மமாக மனத்தினுற் சிந்திப்பதுமாகிய பொருளின் அமைதியாய் நிரம்பியிருத்தல். (௯)

பாட்டும் பொருளும் பொருளாற் பொருந்தும் பயனுமென்பாற், கூட்டும் படிநின் கடைக்கணல் காயுளங்கொண்டு தொண்டர், தீட்டுங் கலைத்தமிழ்த் தீம்பா லமுதமுந் தெளிக்கும் வண்ணங், காட்டும்வெள் ளோதிமப் பேடே சகல கலாவல்லியே.

(ப-ரை.) தொண்டர் - அடியார், உள்ளம் கொண்டு - மனங்கொண்டு, தீட்டும் - எழுதுகிற, கலைத்தமிழ் - தமிழ் நூல்களாகிய, தீ பால் அமுதம்-மதுரமாகிய பாலமுதத்தை, தெளிக்கும் வண்ணம்- தெளிவிக்கும்படி, காட்டும் - காட்டுகிற, வெள் ஓதிமம் பேடே - வெண்மையாகிய பேட்டன்னமே! சகலகலாவல்லியே—! பாட்டும்- பாடலும், பொருளும் - அர்த்தமும், பொருளால் - அர்த்தத்தால், பொருந்தும் - உண்டாகிற, பயனும் - பிரயோசநமும், என்பால்-என்னிடத்தில், கூட்டும்படி - சேர்க்கும்படி, நின் - உனது, கடைக்கண் நல்காய் - கடைக்கண் பார்வையை க்ருபை செய்யக்கடவை.

(போ-ரை.) அடியார் மனங்கொண்டு எழுதுகிற தமிழ் நூல்களாகிய மதுரமாகிய பாலமுதத்தைத் தெளிவிக்கும்படி காட்டுகிற வெண்மையாகிய பேட்டன்னமே! சகலகலாவல்லியே! பாடலும் அர்த்தமும், அர்த்தத்தால் உண்டாகிற பிரயோசநமும் என்னிடத்தில் சேர்க்கும்படி உனது கடைக்கண் பார்வையை க்ருபை செய்யக் கடவை.

(கு - ரை.) பாட்டு பொருள் முதலியவற்றைத் தெளிவித்துக் காட்டுகிற பேட்டன்னமே! அவை யாவும் என்னிடத்துச் சேர்க்கும் படி உன் கடைக்கண் பார்த்தருளவேண்டும்.

(வி - ரை.) பொருளாற் பொருந்தும் பயனுவது - அநுபவப் பயன்; அதாவது, உள்ளுறையா யமைந்திருக்குங் கருத்து. கடைக்க ணல்கல்-கடாக்ஷித்தல். உளங்கொண்டு என்றது நிறைந்த மனதுடன் என்றபடி. பாலையும் நீரையும் பிரித்துணர்த்துவது அன்னத்துக்கும், உலகநூலையும் வீட்டுநூலையும் பிரித்துணர்த்துவது சகலகலாவல்லிக் கும் இயல்பாதலால் இவ்வாறு கூறினுர். உலகநூல் நீருக்கும், வீட்டு நூல் பாலுக்கும் உவமை. பாட்டு - முதனிலை திரிந்த தொழிலாகு பெயர்; பகுதி - பாடு. கண்கடை: கடைக்கண் என முன் பின்னுய் நின்றமையால் இலக்கணப்போலி. 'கடைக்கண் நல்காய்' என்பதில் ணகரம் வருமொழித் தநகரம் திரியக் கெட்டதற்கு நன்னூல் சூத் திரம்: "குறிலணை வில்லா ணனக்கள் வந்த நகரந் திரிந்துழி நண் ணுங் கேடே" வருமொழி நகரம் திரிந்ததற்குச் சூத்திரம் (நன் - மெய் - 34). பேடை: பேடு என்றும் வழங்கும்; இதற்கு ஆண் பால் சேவல். தொண்டர் தீட்டுங் கலைத்தமிழாவது திருவாசக தேவா ராதி பதிகங்களும் திருவாய்மொழியாதி பாசுரங்களுமாம். தீட்டல் - எழுதுதல். (எ)

சொல்விற் பனமு மவதான முங்கல்வி சொல்லவல்ல
நல்வித்தை யுந்தந் தடிமைகொள் வாய்நளி னுசனஞ்சேர்
செல்விக் கரிதென் றொருகால முஞ்சிதை யாமைநல்குங்
கல்விப் பெருஞ்செல்வப் பேறே சகல கலாவல்லியே.

(ப - ரை.) நளினம் - தாமரை மலராகிய, ஆசனம்-தவிசில், சேர் - பொருந்தியிருக்கிற, செல்விக்கு - திருமகளுக்கும், அரிது என்று - அரியதென்று சொல்லப்பட்டு, ஒருகாலமும் - ஒருகாலத்திலும், சிதை

யாமை - அழியாதிருக்கும்படி, நல்கும் - கிருபை செய்கிற, கல்வி பெரும் செல்வப்பேறே-கல்வியாகிய பெருஞ் செல்வத்தின் பயனே! சகலகலாவல்லியே—! சொல் - சொல்லப்பட்ட, விற்பனமும்-விவேகமும், அவதானமும் - அவதான சக்தியும், கல்வி சொல்லவல்ல - கல்வியாற் சொல்லவல்லதாகிய, நல் வித்தையும்-நல்ல வித்தையும், (ஆகிய இவற்றைத்) தந்து - அருள் செய்து, அடிமை கொள்வாய் - என்னை அடிமை கொள்ளக்கடவை.

(பொ - ரை.) தாமரை மலராகிய தவிசில் பொருந்தியிருக்கிற திருமகளுக்கும் அரியதென்று சொல்லப்பட்டு ஒருகாலத்திலும் அழியாதிருக்கும்படி கிருபை செய்கிற கல்வியாகிய பெருஞ் செல்வத்தின் பயனே! சகலகலாவல்லியே! சொல்லப்பட்ட விவேகமும், அவதான சக்தியும், கல்வியாற் சொல்லவல்லதாகிய நல்ல வித்தையும், (ஆகிய இவற்றை) அருள் செய்து என்னை அடிமைகொள்ளக்கடவை.

(க - ரை.) திருமகளாலும் தரப்படாத கல்விச் செல்வத்தின் பேறே! அவதான சக்தி முதலியவற்றை எனக்குத் தந்து என்னை அடிமை கொள்ளவேண்டும்.

(வி - ரை.) அவதானம் - ஏககாலத்திற் பல விடயங்களையும் மனத்தாற் பற்றுதல் (க்ரஹித்தல்); அன்றி ஞாபகசக்தி யெனினுமாம். ஏககாலத்தில் எட்டு, பத்து, பதினாறு முதலிய விஷயங்களைக் கிரகித்துச் சொல்லுதற்கு அஷ்டாவதானம், தசாவதானம், சோடசாவதானம் என வழங்குதல் காண்க. வல்ல-குறிப்புப்பெயரெச்சம். ஙளினாசனம்-தீர்க்க சந்தி. செல்வி-செல்வத்தைத் தருபவள். சிதையாமை - எதிர்மறைத் தொழிற்பெயர். சீதேவிக்குச் சிதையாமை நல்கலாவது-செல்வத்தாற் பெறும் பயனை எக்காலத்தும் அழியாது நிலைத்திருக்கச் செய்தல். பேற-முதனிலை திரிந்த தொழிலாகுபெயர். அன்று - அன்றி. அரிதன்று என்றும் பாடம். கல்விப்பொருள் செல்வப்

பொருள் என்னும் இருவகைச் செல்வங்களுள், சிதேவியால் கொடுக்கப்படும் செல்வப்பொருள் அழியும்; எக்காலத்தும் அழியாத கல்விப் பொருளைக் கொடுப்பது அச்சீதேவியார்க்கு அரிதென்று அருள் கூர்ந்து அக்கல்விப் பெருஞ்செல்வத்தைத் தருபவராதலால், 'செல்விக் கரிதென் றொருகால முஞ்சிதை யாமைநல்குங், கல்விப் பெருஞ் செல்வப் பேறே' என்றார் எனினும் பொருந்தும்; இதனை நாயனார் "ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற், கெழுமையு மேமாப் புடைத்து" (திருக்குறள்-கல்வி-அ) எனக் கூறுதலானு மறிக. (அ)

சொற்கும் பொருட்கு முயிராமெய்ஞ் ஞானத்தின்
றோற்றமென்ன, நிற்கின்றநின்னை நினைப்பவர் யார்நிலந்தோய்
புழைக்கை, நற்குஞ் சரத்தின் பிடியோ டரசன்ன நாண
நடை, கற்கும் பதாம்புயத் தாளே சகல கலாவல்லியே.

(ப-ரை.) நிலம் தோய் - நிலத்திற் படிகின்ற, புழைக்கை - துதிக்கையையுடைய, நல் - நல்ல, குஞ்சரத்தின் பிடியோடு - பெண் யானையோடு, அரச அன்னம் - அரச அன்னமும், நாண - வெள்கும் பள், நடை கற்கும் - நடை பழகுகின்ற, பதம் அம்புயத்தாளே - திருவடித்தாமரையை யுடையவளே! சகலகலாவல்லியே—! சொற்கும் பொருட்கும் - சொல்லுக்கும் பொருளுக்கும், உயிர் ஆம் - உயிராகிய, மெய் ஞானத்தின் - உண்மை ஞானத்தின், தோற்றம் என்ன-காட்சி யென்று சொல்லும்படி, நிற்கின்ற நின்னை - நிற்கின்ற உன்னை, நினைப்பவர் யார் - நினைக்கவல்லவர் யார்?

(பொ-ரை.) நிலத்திற் படிகின்ற துதிக்கையையுடைய நல்ல பெண்யானையோடு அரச அன்னமும் வெள்கும்படி நடை பழகுகின்ற திருவடித்தாமரையை யுடையவளே! சகலகலாவல்லியே! சொல்லுக்கும் பொருளுக்கும் உயிராகிய உண்மைஞானத்தின் காட்சி யென்று சொல்லும்படி நிற்கின்ற உன்னை நினைக்கவல்லவர் யார்?

(க - ரை.) பெண்யானையும் அன்னமும் நாணுதற்குரிய நடையை யுடையவளே! சொற்பொருள்களுக்கு உயிர்போ லிருக்கிற வுன்னை நினைக்கவல்லவர் யார்?

(வி - ரை.) சொற்கும் பொருட்கும் ஞானம் கருவியாதலின் 'சொற்கும் பொருட்கும் உயிராம் மெய்ஞ்ஞானம்' எனப்பட்டது. தோற்றம் - அவதாரம் (பிறப்பு). யார் என்னும் வினு ஒருவரு மில்லை யென எதிர்மறுத்து நின்றது. புழைகை - துளை. புள்ளகை - (தும்பிக்கை). நற்குஞ்சரம்-அரசயானை. பிடி-பெண்யானை. குஞ்சரத்தின் பிடி என்பதைப் பிடிக்குஞ்சரம் என வைத்து இருபெயரொட்டுப் பண்புத்தொகையாகக் கொள்க. குஞ்சரத்தின் என்பதில் இன் சாரியை; அது வேண்டாவழிச்சாரியை யெனவும், தவிர்வழிவந்த சாரியை யெனவும், அல்வழிச்சாரியை யெனவும் பெயர் பெறும். குஞ்சம் - கும்பஸ்தலங்கட்குக் கீழேயுள்ள குழிகள்; அவற்றை யுடையது குஞ்சரம். அரச அன்னம் என்பது அரசன்னம் என் நிலைமொழி யீறு தொகுத்தலாயிற்று. ['நிற்கும் பிராமியென் னுவிலென் னேநின் றிலை' என்றும் பாடமுண்டு; இதற்கு, 'நிலைபெற் றிருக்கின்ற சரஸ்வதியே! எனது நாவில் என்னவோ நீ நின்ருயில்லை' எனப் பொருள் கொள்க. பிரமன் மனைவியாதலின் 'பிராமி' என்று கூறினர். 'நின் றிலை' என்பதை ஒரு மொழியாகக் கொண்டு எதிர்மறை முன்னிலை ஒருமை வினைமுற்று என்ருவது, நின்ருயில்லை என்னுந் தொடர் மொழியில் நிலைமொழியாகிய வினைமுற்று விகுதி குறைந்தவந்த தென்ருவது கொள்க.] மாதர் நடைக்கு உவமைப்பொருளாகிய 'பிடியும் அன்னமும் நடை கற்கும் பதாம்புயத்தாள்' என்றமையால் இவள் நடையின் சிறப்புக் கூறப்பட்டது. நடை கற்கும்போதே பிடியும் அரசவன்னமும் நாணுமாயின் கற்றுத் தேர்ந்த நடைக்கு நாணுதல் சொல்லவேண்டாதாயிற்று. அம்புஜம் நீரில் முளைப்பது என்னும் பொருளதோர் வடசொல், அது அம்புயம் எனத் திரிந்துவந்தது. (கூ)

மண்கண்ட வெண்குடைக் கீழாக மேற்பட்ட மன்னருமென்
பண்கண் டளவிற் பணியச்செய் வாய்படைப் போன்முதலாம்
விண்கண்ட தெய்வம் பல்கோடி யுண்டேனும் விளம்பி லுன்
கண்கண்ட தெய்வ முளதோ சகல கலாவல்லியே. [போற்

(ப - ரை.) படைப்போன் முதல் ஆம் - படைப்பவன் முதலாகிய, விண் கண்ட தெய்வம் - விண்ணுலகத்துள்ள தெய்வங்கள், பல் கோடி உண்டு எனும் - பல கோடி யுளவாயினும், விளம்பில்-சொல்லுமிடத்தில், உன்போல் - உன்னைப்போல, கண் கண்ட தெய்வம் உளதோ-கண்கண்ட தெய்வமுண்டோ! சகலகலாவல்லியே—! மண் கண்ட - அலங்காரத்தைக் கொண்ட, வெள் குடை கீழாக - வெண் கொற்றக் குடைநிழலின் கீழே செல்லும் வண்ணம், மேற்பட்ட - மேன்மை யடைந்திருக்கிற, மன்னரும்-அரசரும், என்-எனது, பண் கண்ட அளவில் - சீரைக் கண்டவுடன், பணியச் செய்வாய் - என்னை வணங்கும்படி செய்யக்கடவை.

(போ - ரை.) படைப்பவன் முதலாகிய விண்ணுலகத்துள்ள தெய்வங்கள் பல கோடி யுளவாயினும், சொல்லுமிடத்தில் உன்னைப் போல கண்கண்ட தெய்வமுண்டோ? சகலகலாவல்லியே! அலங்காரத்தைக் கொண்ட வெண்கொற்றக் குடைநிழலின் கீழே மேன்மையடைந்திருக்கிற அரசரும் எனது சீரைக் கண்டவுடன் என்னை வணங்கும்படி செய்யக்கடவை.

(க - ரை.) பிரத்தியக்ஷ தேவதையே! வெண்கொற்றக் குடை நிழலிலிருந்து உலகத்தை யாளுகிற அரசரும் என் சீரைக் கண்டவுடன், என்னை வந்து வணங்கும்படி செய்யக்கடவை.

(வி - ரை.) மண்ணல்-அலங்கரித்தல். மண் - முதனிலைத் தொழிற்பெயர். 'மண்கண்ட வெண்குடைக் கீழாக' என்பதற்கு, 'பூமியானது தாம் படைத்த அல்லது பூமியில் காணப்பட்ட வெண்கொற்றக்

குடைநிழலி லமைந்து நடக்கும் வண்ணம்' எனப் பொரு ளுரைத்தலு மாம். குடைக்கீழாக என்றதனால், மேற்பட்ட என்பதற்கு யானை குதிரை யென்பவற்றின்மேல் எனப் பொருள் கொள்ளக் கிடத்தல் காண்க. வெண்குடை-சந்திரவட்டக்குடை. மன்னரும் என்ற வும்மை உயர்வுசிறப்பு. கண்ட அளவில் என்பது கண்டளவில் எனத் தொகுத்தல் பெற்றது. மண்கண்ட, பண்கண்ட, விண்கண்ட என்பன இரண்டாம் வேற்றுமைத் தொகையாதலாலும், கண்கண்ட மூன்றும் வேற்றுமைத் தொகையாதலாலும் ணகரம் விகாரத்தியல்பாயிற்று. பண்கண்ட+அளவில் என்பதில் நிலைமொழி யீற்றகரந் தொகுத்தல். உளது, உண்டு-குறிப்பு வினைமுற்றுகள். கவிசெய்ய வல்லானுக்கு அரசரும் தாழ்தல் பிரத்தியக்ஷம் ஆதலின் அச்சிறப்பைத்தரும் கல்விக்கு அதிதேவதையாகிய நாமகளைக் 'கண்கண்ட தெய்வம்' என்றார். பல்கோடி யென்றது முப்பத்து முக்கோடி யென்றபடி. 'பல கோடி யுண்டு' என்றும் பாடமுண்டு. ஓகாரம் எதிர்மறை. எனைத் தேவர்கள் உளரெனக் கேட்டதேயன்றிக் கண்டதில்லை. உன்னை ஒலிவடிவிற் கேட்டும் வரிவடிவிற் கண்டும் இருக்கிறோம்; ஆதலால், நீயே எம்மனோர்க்குப் பிரத்தியக்ஷ தேவதையென்றும், எனக்குப் பொருள் முதலிய வேண்டா; அரசர் முதலானோர் என்னைத் தாழ்ந்து வணங்கச் செய்வையாயின் அஃதொன்றுமே யமையுமெனத் தமதுட்கருத்தை யுணர்த்தினாராயிற்று. (௩௦)

## சரசுவதிதோத்திரம் மூலமும் உரையும்

முற்றுப்பெற்றது.



உ

ஸ்ரீ லக்ஷ்ம்யைநம:

# இலக்குமி தோத்திரம்

## மூலமும் உரையும்.



மூவுலகு மிடரியற்று மடலவுண ருயிரொழிய முனிவு கூர்ந்த, பூவையுறழ் திருமேனி யருட்கடவு ளகன்மார்பிற் பொலிந்து தோன்றித், தேவருல கினும்விளங்கும் புகழ்க் கொல்லா புரத்தினிது சேர்ந்து வைகும், பாவையிரு தாடொ ழுது பழமறைதேர் குறுமுனிவன் பழிச்சு கின்றான்.

(பதவுரை.) மூவுலகும் - மூன்றுலகங்களுக்கும், இடர் இயற்றும் - துன்பத்தைச் செய்கிற, அடல்-வலிமை பொருந்திய, அவுணர்-அசுரருடைய, உயிர் - உயிரானது, ஒழிய-(அவரது உடம்பைவிட்டு) நீங்கும்படி, முனிவு கூர்ந்த - கோவமிகுந்த, பூவை உறழ் திருமேனி-காயாமலரை நிகர்த்த திருமேனியையுடைய, அருள் கடவுள் - கருணைக்கடலாகிய திருமாலின், அகல் மார்பில் - விசாலமான திருமார்பில், பொலிந்து தோன்றி - பிரகாசித்துத் தோன்றி, தேவர் உலகினும் - தேவலோகத்திலும், விளங்கு-(சென்று) விளங்குகிற, புகழ் - கீர்த்தியையுடைய, கொல்லாபுரத்து - கொல்லாபுரத்தில், இனிது - இனிதாக, சேர்ந்து வைகும் - சேர்ந்து வாழ்கின்ற, பாவை - பாவை போலும் உருவுடையவளாகிய இலக்குமியின், இரு தாள் - இரண்டு திருவடிகளையும், தொழுது - வணங்கி, பழமறை தேர்-பழமையாகிய வேதங்களை யாராய்ந்து தெளிந்த, குறுமுனிவன்-அகத்திய முனிவன், பழிச்சுகின்றான் - தோத்திரஞ் செய்யலானான்.

(பொழிப்புரை.) மூன்றுலகங்களுக்கும் துன்பத்தைச் செய்கிற வலிமை பொருந்திய அசுரருடைய உயிரானது (அவரது உடம்பை விட்டு) நீங்கும்படி கோவமிகுந்த காயாமலரை நிகர்த்த திருமேனியை யுடைய கருணைக் கடவுளாகிய திருமாலின் விசாலமான திருமார்பில் பிரகாசித்துத் தோன்றி, தேவலோகத்திலும் (சென்று) விளங்குகிற கீர்த்தியையுடைய கொல்லாபுரத்தில் இனிதாகச் சேர்ந்து வாழ்கின்ற பாவைபோலும் உருவுடையவளாகிய இலக்குமியின் இரண்டு திருவடிகளையும் வணங்கி, பழமையாகிய வேதங்களை யாராய்ந்து தெளிந்த அகத்தியமுனிவன் தோத்திரஞ் செய்பலானன்.

(விசேடவுரை.) 'மூவுலகு' என்றது சுவர்க்க மத்திய பாதாள லோகங்களை; இது இடவாகுபெயராய் அவ்வுலகங்களி லுள்ளோரை யுணர்த்தும்; அவ்வுலகங்களி லுள்ளோர் முறையே தேவர், மானுடர், நாகர் என்போர். மூவுலகும் இடர் இயற்றும் என்பதற்கு மூன்றுலகங் களினுஞ் சென்று அங்குள்ளோரைத் துன்பப்படுத்துகிற எனப் பொருள் கூறினு மமையும். அடல்-வெற்றியெனினும் பொருந்தும், கொல்லுந் தொழிலுமாம். அவுணராவார் - இராவணன் முதலியோர். ஒழிக்கவென்னாது ஒழியவென்றமையால் பெருமானது பாணவேகத் துக் கஞ்சி ஒருவர் நீக்கவேண்டாது உயிர் தானே நீங்குமென்றதாயிற்று. முனிவு கூர்தலாவது - கொல்லுதல். பூவை - அதன் மலரை யுணர்த்தினமையால் முதலாகுபெயர்; இம்மலர் நீலநிற முள்ளதாதலால் திருமாலின் திருமேனிக் குவமையாயிற்று. அருட்கடவுள்-அருளுருவாகிய கடவுள் எனினுமாம். கடவுள்-தொழிலாகுபெயர்; இதற்குப் பொருள் எல்லாப் பொருள்களையுங் கடந்து நின்றவன் என்பது. தேவருலகினும் என்பதில் உம்மை உயர்வுசிறப்பு, இறந்தது தழீஇயதுமாம். சேர்ந்து வைகுதல் - நித்திய வாசம் பண்ணுதல். பாவை - பிரதிமை, இது உவமையாகுபெயராய்ப் பாவைபோல்வாளை யுணர்த்திற்று. சிற்றுருவினராதலால் அகஸ்தியரைக் 'குறுமுனிவன்' என்றார். வேதம் அநாதியாயும் அபௌருஷேயமாயு முள்ளதாதலால்

அதனைப் 'பழமறை' என்றார். முனிவன் என்பதற்கு மநநசீலன் என்பது பொருள்; அஃதாவது: கடவுளை இடையறாது தியானித்துக்கொண்டிருப்பவன். மூவுலகும் என்னும் உம்மை முற்றும்மை. முடிவு - தொழிற்பெயர். உறழ் திருமேனி - வினைத்தொகைநிலைத்தொடர். பழிச்சல் - துதித்தல். (௬)

கொழுதியிசை யளிமுரலுந் தாமரைமென் பொகுட்டி லுறை கொள்கை போல, மழையுறழுந் திருமேனி மணி வண்ண னிதயமலர் வைகு மானே, முழுதுலகு மினிதீன்ற வருட்கொம்பே கரகமல முகிழ்த்தெந் நாளும், கழிபெருங்கா தலிற்றொழுவோர் வினைதீர வருள்கொழிக்குங் கமலக் கண்ணாய்.

(ப - ரை.) அளி - வண்டுகள், கொழுதி - கிண்டி, இசை முரலும் - பண்களைப் பாடுதற்கிடமாகிய, தாமரை - தாமரைமலரின், மெல் பொகுட்டில் - மென்மையாகிய கொட்டையின்மீது, உறை கொள்கை போல - வாழுந்தன்மைபோல, மழை உறழும் - நீலமேகத்தை நிகர்த்த, திருமேனி - திருமேனியையுடைய, மணி வண்ணன் - மணிவண்ணனாகிய திருமாலின், இதய மலர் - இருதய தாமரைமலரில், வைகும் - தங்கியிருக்கிற, மானே - மானே! முழுது உலகும் - உலக முழுதையும், இனிது ஈன்ற - இனிதாகப் பெற்ற, அருட் கொம்பே - அருட்கொடியே! கரகமலம் முகிழ்த்து - கைத்தாமரையைக் குவித்து, நாளும் - நாள்தோறும், கழி பெரும் காதலின் - மிக்க பேரன்பினோடு, தொழுவோர் - வணங்குவோருடைய, வினை தீர - வினைக ளொழியும்படி, அருள் கொழிக்கும் - அருளைக் கொழிக்கிற, கமலக் கண்ணாய் - தாமரை மலர்போலுங் கண்களை யுடையாளே!

(பொ-ரை.) வண்டுகள் கிண்டி பண்களைப் பாடுதற்கிடமாகிய தாமரைமலரின் மென்மையாகிய கொட்டையின்மீது வாழுந்தன்மை போல நீலமேகத்தை நிகர்த்த திருமேனியையுடைய மணிவண்ண

ளுகிய திருமாலின் இருதய தாமரை மலரில் தங்கியிருக்கிற மானே! உலக முழுதையும் இனிதாகப் பெற்ற அருட்கொடியே! கைத்தாமரையைக் குவித்து நாள்தோறும் மிக்க பேரன்பினோடு வணங்குவோருடைய வினைகளொழியும்படி அருளைக் கொழிக்கிற தாமரை மலர்போலுங் கண்களை யுடையாளே!

(வி - ரை.) கொழுதி யென்பதற்குப் பகுதி கொழுது; கொழுதுதலாவது மூக்கினாலும் கால்களாலும் கிளறுதல். பண்-கட்டபாடை, புஞ்சரம், இந்தளம் முதலியன. பொகுட்டைக் கர்ணிகை யென்பர் வடநூலார். மழை - குளிர்ச்சி; அது பண்பாகுபெயராய் மேகத்தை யுணர்த்திற்று. மழையென வாளா கூறினாரேனும் திருமாலின் திருமேனிக்கு உவமையாதலால் நீலமென் றுரை கூறப்பட்டது. மணி - நீலரத்நம். வைகுதல் - நித்யவாசம் பண்ணுதல். மானே யென்பதற்கு மான்போலும் மருண்ட நோக்கத்தை யுடையவளே யென்பது பொருள்; இது உவமையாகுபெயர். முழுதுலகும் என்ற வும்மை முற்றும்மை; இது எஞ்சாமைப் பொருளில் வருவது. கரகமலம் - வடமொழிப் புணர்ச்சியாதலால் இயல்பாயிற்று. அருட்கொம்பு - அருளுருவாகிய கொம்பு; அருளாகிய பயனைத் தருங் கொம்பு; மலர் கனி முதலியவற்றைத் தருகிற பிறகொம்புகளுக்கும் இதற்கும் வேறுபாடு தோன்ற 'அருட்கொம்பு' என்றார். கரகமல முகிழ்த்தலாவது கை கூப்பி அஞ்சலி செய்தல். பேரன்பு என்பது தோன்றக் 'கழிபெருங் காதல்' என்றார். 'வினைதீர' என்றது பிறந்திறந்துழலுந் தொழிலொழிய என்றபடி. வினை - தொழில். கொழித்தல் - வீசுதல். கமலக்கண்ணாய் என்பதில் கமலம் நீரை யலங்கரிப்பதென்னும் பொருளது. இதயம் - ஹ்ருதயம் என்னும் வடசொற்றிரிபு. காதலின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்றுவதன் கருவிப்பொருளில் வந்தது. (உ)

கமலைதிரு மறுமார்பன் மனைக்கிழத்தி செழுங்கமலக் கையாய் செய்ய, விமலைபசுங் கழைகுழைக்கும் வேனிலான்

றனையீன்ற விந்தை தூய, வமுதகும்ப மலர்க்கரத்தாய் பாற்கடலு ளவதரித்தோ யன்பர் நெஞ்சத், திமிரமகன் றிடவொளிருஞ் செழுஞ்சுடரே யெனவணக்கஞ் செய்வான் மன்னோ.

(ப-ரை.) கமலை - கமலையே! திரு மறு மார்பன் - அழகிய மறுவமைந்த மார்பினை யுடையவனாகிய ஸ்ரீ மகாவிஷ்ணுவின், மனைக்கிழத்தி-மனைக்கிழத்தியே! செழு கமலம் கையாய்-செழுமையாகிய தாமரை மலர்போலுங் கையையுடையவளே! செய்ய விமலை-செந்நிறமுள்ள விமலையே! பசு கழை - பசுமையாகிய கரும்பை, குழைக்கும் - (வில்லாக) வளைக்கிற, மேனிலான்தனை - மன்மதனை, ஈன்ற - பெற்ற, விந்தை - விந்தையே! தூய-பரிசுத்தமாகிய, அமுத கும்பம் - அமிர்த கலசத்தை யேந்திய, மலர் கரத்தாய் - தாமரை மலர் போலுங் கையினை யுடையவளே! பால் கடலுள் அவதரித்தோய் - திருப்பாற்கடலில் அவதரித்தவளே! அன்பர் - அன்பரது, நெஞ்சம் திமிரம் - மனவிருளானது, அகன்றிட - அகன்றொழியும்படி, ஒளிரும் - பிரகாசிக்கிற, செழும் சுடரே - செழுமையாகிய சூரியனே! என - என்று, வணக்கம்செய்வான் - வணங்குவானாயினான்.

(பொ-ரை.) கமலையே! அழகிய மறுவமைந்த மார்பினை யுடையவனாகிய ஸ்ரீ மகாவிஷ்ணுவின் மனைக்கிழத்தியே! செழுமையாகிய தாமரை மலர்போலுங் கையை யுடையவளே! செந்நிறமுள்ள விமலையே! பசுமையாகிய கரும்பை (வில்லாக) வளைக்கிற மன்மதனைப் பெற்ற விந்தையே! பரிசுத்தமாகிய அமிர்தகலசத்தை யேந்திய தாமரை மலர்போலுங் கையினை யுடையவளே! திருப்பாகற்டலில் அவதரித்தவளே! அன்பரது மனவிருளானது அகன்றொழியும்படி பிரகாசிக்கிற செழுமையாகிய சூரியனே! என்று வணங்குவானாயினான்.

(வி-ரை.) மன், ஓ-அசைநிலைகள். கமலை-கமலாசனத்தி லிருப்பவள். திருமறு மார்பன் என்பதிலுள்ள மறு என்பது திருமாலின்

மார்பி லிருக்கிற உத்தமலக்ஷணமாகிய ஓர் மறு; இதனை ஸ்ரீ வத்ஸம் என்பர் வடநூலார். மனைக்கிழத்தி-மனையாட்டி. விமலை-பரிசுத்தமா யிருப்பவள். வேனில் - வசந்தகாலம்; இந்தக் காலம் மன்மதனுக்குவப் பாகிய காலமாதலால் அவனை 'வேனிலான்' என்றும், விந்தை - வீர லக்ஷ்மி, திருப்பாற்கடலில் அவதரித்த காலத்தில் அமிர்தகலசத்தைக் கையி லேந்திவந்தா ளாதலால் 'அமுதகும்ப மலர்க்கரத்தாய்' என்றும், திருப்பாற் கடல் கடைந்த காலத்தில் அதற் றோன்றினவ ளாதலால், 'பாற்கடலு ளவதரித்தோய்' என்றும், அன்பரது மனவிருளாகிய அஞ்ஞானத்தை நீக்கியருள்பவ ளாதலால் 'அன்பர் நெஞ்சத், திமிர மகன்றிட வொளிருஞ் செழுஞ் சுடரே' என்றும் கூறினர். கமலை, திருமறுமார்பன் மனைக்கிழத்தி, விந்தை என்பன அண்மைவிளிக ளாதலால் இயல்பாயின. குழைத்தல் - வளைத்தல். அன்பர் - அன்பு செய்வோர். அன்பு - பத்தி. நெஞ்சம் என்பதில் அம் சாரியை. திமிர மகன்றிட வென்றதற் கேற்பச் சுடர் என்றதற்குச் சூரியன் எனப் பொருள் கூறலாயிற்று. 'வணக்கஞ்செய்வான்' என்பது ஒரு சொன் னீரது; வணக்கத்தைச் செய்வான் என்பது பொருள். வணக்கம்-தாழ் தல்; இதற்குப் பகுதி வணங்கு. 'அமுதகும்ப கனதனத்தாய்' என்றும் பாடம்; இதற்கு,'அம்ருத கலசங்கள்போன்ற பெருந்தனத்தையுடைய வளே!' என்பது பொருள். நெஞ்சத்திமிரம் - மனத்திலுள்ள இருள் (அஞ்ஞானம்). (ந)

மடற்கமல நறும்பொருட்டி லரசிருக்குஞ் செந்துவர் வாய் மயிலே மற்றுன், கடைக்கணருள் படைத்தன்றோ மணி வண்ண னுலகமெலாங் காவல் பூண்டான், படைத்தனனும் முகக்கிழவன் பசுங்குழவி மதிபுனைந்த பரமன் றானுந், துடைத்தனனின் பெருஞ்சீர்த்தி யெம்மனோ ராலெடுத்துச் சொல் லற் பாற்றோ.

(ப - ரை.) மடல் - இதழ்களையுடைய, நறு-வாசனையுள்ள, கம லப் பொருட்டில் - தாமரைப் பூங்கொட்டையில், அரசு இருக்கும் -

அரசு வீற்றிருக்கிற, செம் துவர் - செம்பவளம்போன்ற, வாய் - அதரத்தையுடைய, மயிலே - மயில்போல்வாளே! உன் - உனது, கடைக்கண் அருள் படைத்து அன்றோ - கடைக்கண்ணின் கிருபையைப் பெற்றல்லவா, மணி வண்ணன் - நீலமணிபோலும் நிறத்தினையுடைய திருமால், உலகம் எல்லாம் - உலக முழுதையும், காவல் - காத்தற்றொழிலை, பூண்டான் - மேற்கொண்டான்; நான்முகக் கிழவன் - பிரமன், படைத்தனன் - (உலகங்களைப்) படைத்தான்; பசு குழவி மதி - பசுமையாகிய இளஞ் சந்திரனை, புனைந்த - (சடையில்) தரித்த, பரமன்தானும் - மேலோனாகிய சிவபெருமானும், துடைத்தனன் - (உலகங்களைச்) சங்கரித்தான்; (ஆதலால்) நின் பெரும் சீர்த்தி - உன் பெருங் கீர்த்தியானது, எம் அனோரால் - எம்போல்வாரால், எடுத்து சொல்லற்பாற்றோ - எடுத்துச் சொல்லும் பான்மைத்தோ.

(பொ - ரை.) இதழ்களையுடைய வாசனையுள்ள தாமரைப் பூங்கோட்டையில் அரசு வீற்றிருக்கிற செம்பவளம்போன்ற அதரத்தையுடைய மயில்போல்வாளே! உனது கடைக்கண்ணின் கிருபையைப் பெற்றல்லவா நீலமணிபோலும் நிறத்தினையுடைய திருமால் உலக முழுதையும் காத்தற்றொழிலை மேற்கொண்டான்; பிரமன் (உலகங்களைப்) படைத்தான்; பசுமையாகிய இளஞ்சந்திரனை (சடையில்) தரித்த மேலோனாகிய சிவபெருமானும் (உலகங்களைச்) சங்கரித்தான்; (ஆதலால்) உன் பெருங் கீர்த்தியானது எம்போல்வாரால் எடுத்துச் சொல்லும் பான்மைத்தோ.

(வி - ரை.) அரசு - பண்பாகுபெயராய் அரசியென்னும் பொருளில் வந்தது; அன்றி, அரசிருக்கும் என்பதற்கு அரசாட்சியி லிருக்கும் என வுரைப்பினு மமையும். துவர் - செந்நிறம்; இது தன்னையுடையதாகிய பவளத்தை யுணர்த்தலால் பண்பாகுபெயர்; இதற்குச் செம்மை இயற்கையடை. மயில் - உவமையாகுபெயர்; சாயலால் உவமை கொள்க. மற்று - அசை. மனத்திலுள்ள அருளைக் குளிர்ந்த

பார்வையா லுணர்த்துவது கண்ணுதலால் 'கடைக்கணருள்' எனப்பட்டது; கடைக்கண் என்பதனைக் 'கடாக்ஷம்' என்றும், 'அபாங்கம்' என்றும் கூறுவர் வடநூலார். அன்றோ என்னும் ஓகாரம் உடம்பாட்டில் வந்தது. குழவிமதியென் றொழியாது பசுங்குழவிமதி யென்றது மிக்க இளமையாகிய சந்திரனென்ப துணர்த்தற்கென்க; அது ஒரு கலையாகிய சந்திரன். மதி=மது, இ எனப் பிரிக்கப்பட்டு அமிர்தத்தை யுடையது எனப் பொருள்படும். மும்மூர்த்திகள் முத்தொழில் செய்வது உன் கடாக்ஷத்தாலே யென்பது இச்செய்யுட் கருத்து. (ச)

மல்லனெடும் புவியனைத்தும் பொதுநீக்கித் தனிபுரக்கு மன்னர் யாரும், கல்வியினிற் பேரறிவிற் கட்டழகி னிகரில்லாக் காட்சியோரும், வெல்படையிற் பகைதுரந்து வெஞ்சமரில் வாகைபுனை வீரர் தாமு, மல்லிமலர்ப் பொகுட்டுறையு மணியிழைநின் னருணோக்க மடைந்து ளாரே.

(ப - ரை.) மல்லல் - வளம் பொருந்திய, நெடும் புவி அனைத்தும் - பெரிதாகிய பூமி முழுதும், பொது நீக்கி - பொதுவினின்று நீக்கி, தனி புரக்கும் - தனியே காக்கின்ற, மன்னர்தாமும்-அரசரும்; கல்வியினில் - கல்வியிலும், பேரறிவில் - முதிர்ந்த அறிவிலும், கட்டழகில் - பேரழகிலும், நிகர் இல்லா-சமானமில்லாத, காட்சியோரும் - பேரறிவினை யுடையவர்களும்; வெல் படையின் - வெல்லுகிற படையைக் கொண்டு, பகை துரந்து - பகைவரைத் துரத்தி, வெம் சமரில் - கொடிய போரில், வாகை புனை - வாகைமாலையைத் தரித்த, வீரர் தாமும் - வீரரும்; அல்லி - அகவிதழ்களையுடைய, மலர் - தாமரை மலரின், பொகுட்டு - கர்ணிகையில், உறையும் - வசிக்கின்ற, அணியிழை - இலக்குமியே! நின் - உனது, அருள் நோக்கம்-க்ருபா நோக்கத்தை, அடைந்துளாரே - பெற்றுளாரேயாவர்.

(போ - ரை.) வளம் பொருந்திய பெரிதாகிய பூமி முழுதும் பொதுவினின்று நீக்கித் தனியே காக்கின்ற அரசரும், கல்வியிலும்

முதிர்ந்த அறிவிலும் பேரழகிலும் சமானமில்லாத பேரறிவினை யுடையவர்களும், வெல்லுகிற படையைக் கொண்டு பகைவரைத் துரத்தி, கொடிய போரில் வாகைமாலையைத் தரித்த வீரரும், அகவிதழ்களையுடைய தாமரைமலரின் கர்ணிகையில் வசிக்கின்ற இலக்குமியே! உனது க்ருபா நோக்கத்தைப் பெற்றுளாரேயாவர்.

(வி - ரை.) 'நெடும் புவி' என்பதில் நெடுமை விஸ்தீர்ணத்தையுணர்த்திற்று. பொது நீக்கிப் புரத்தலாவது - எல்லார்க்கும் உரியதாயிராமல் பூமி முழுதும் தானே கைக்கொண்டாளுதல். 'கல்வியினின் பேரறிவின் கட்டழகின்' என்பவற்றில் இன் மூன்றுவதன் கருவிப் பொருளில் வந்தன. 'மன்னர்தாமும் காட்சியோரும் வீரர்தாமும்' என்பவற்றிலுள்ள வும்மைகள் எண்ணும்மைகள். ஒருகாலுந் தோல்வியிலதென்பது தோன்ற 'வெல்படை' என்றார். படை-யானைப்படை, குதிரைப்படை, தேர்ப்படை, காலாட்படை என நான்குவகைப்படும். பகை - பண்பாகுபெயர். 'மலர்' எனப் பொதுப்படக் கூறினாரேனும் திருமகட் கிடமாகக் கூறப்படுதலால் தாமரை மலருக்காயிற்று. அணியிழை - வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர்; இது அண்மைவிளி யாதலால் இயல்பாயிற்று. சமரம் என்னும் வடமொழி யீறு குறைந்து சமர் என வந்தது. அல்லி-உட்புறத்திதழ்கள்; புறத்திதழ்களுக்குப் புல்லியென்று பெயர். அடைந்துளோரே யென்னும் ஏகாரம் தேற்றம். (இ)

செங்கமலப் பொலந்தாதிற் றிகழ்ந்தொளிரு மெழின் மேனித் திருவே வேலை, யங்கணுல கிருடேக்கு மலர்கதிராய் வெண்மதியா யமரர்க் கூட்டும், பொங்கமுலா யுலகளிக்கும் பூங்கொடியே நெடுங்கானிற் பொருப்பின் மண்ணி, லெங்குளை நீ யவணன்றோ மல்லல்வளஞ் சிறந்தோங்கி யிருப்ப தம்மா.

(ப-ரை.) செம் கமலம்-செந்தாமரை மலரின், பொலம் தாதின்-பொன்மயமாகிய மகரந்தத்தைப்போல, திகழ்ந்து ஒளிரும் - மிக்கு விளங்குகிற, எழில் மேனி-அழகிய திருமேனியையுடைய, திருவே - திருமகளே! வேலை - கடலாற் சூழப்பட்ட, அம் கண் - அழகிய இடத்தையுடைய, உலகு - உலகத்திலுள்ள, இருள் - இருளை, துரக்கும் - ஓட்டுகிற, அலர் கதிர் ஆய் - விரிந்த கிரணங்களையுடைய சூரியனாய், வெள் மதி ஆய் - வெண்மையாகிய சந்திரனாய், அமரர்க்கு - தேவர்களுக்கு, ஊட்டும் - (அவிசை) உண்பிக்கிற, பொங்கு அழல் ஆய் - மிக்க நெருப்பாகி, உலகு அளிக்கும் - உலகத்தைக் காக்கின்ற, பூங்கொடியே - பூங்கொடி போல்வாளே! நெடும் கானில் - பெருங்காட்டில், பொருப்பில் - மலையில், மண்ணில் - பூமியில், நீ எங்கு உளை - நீ யெவ்விடத்தி லிருக்கிறாயோ, அவண் அன்றோ-அவ்விடமல்லவா, மல்லல் வளம் - மிக்க வளமானது, சிறந்து ஓங்கி இருப்பது - சிறப்படைந்து உயர்வாகி யிருப்பது.

(பொ - ரை.) செந்தாமரை மலரின் பொன்மயமாகிய மகரந்தத்தைப்போல மிக்கு விளங்குகிற அழகிய திருமேனியையுடைய திருமகளே! கடலாற் சூழப்பட்ட அழகிய இடத்தையுடைய உலகத்திலுள்ள இருளை ஓட்டுகிற விரிந்த கிரணங்களையுடைய சூரியனாய், வெண்மையாகிய சந்திரனாய், தேவர்களுக்கு (அவிசை) உண்பிக்கிற மிக்க நெருப்பாகி உலகத்தைக் காக்கின்ற பூங்கொடி போல்வாளே! பெருங்காட்டில், மலையில், பூமியில், நீ யெவ்விடத்தி லிருக்கிறாயோ அவ்விடமல்லவா மிக்க வளமானது சிறப்படைந்து உயர்வாகி யிருப்பது.

(வி - ரை.) அம்மா - உரையசை யிடைச்சொல். வேலை-வேலா என்னும் வடசொற்றிரிபு. கதிர் - சினையாகுபெயர். வெண்மதியாய் என்றதில் வெண்மை இயற்கையடை. அமரர் - கற்பகாலத்தளவும் இறவாதிருப்பவர்; இது மங்கலம். அமரர்க் கூட்டும் பொங்கழல் -

ஓமாக்கினி. உலகு - இடவாகுபெயராய் உலகிலுள்ள சீவர்களைக் குறித்தது. பூங்கொடி - உவமையாகுபெயர். மல்லல் வளம்-(பெருஞ் செல்வம்). (௬)

என்றுதமிழ்க் குறுமுனிவன் பன்னியொடு மிருநிலத்தி லிறைஞ்ச லோடு, நன்றுனது துதிமகிழ்ந்தே நான்மறையோ யித்துதியை நவின்றோர் யாரும், பொன்றலரும் பெரும்போக நுகர்ந்திடுவ ரீங்கிதனைப் பொறித்த வேடு, மன்றன்மனை யக த்திருப்பின் வறுமைதரு தவ்வையவண் மருவல் செய்யாள்.

(ப - ரை.) என்று - என்று சொல்லி, தமிழ்-தமிழாசிரியராகிய, குறுமுனிவன் - அகத்தியர், பன்னியொடும் - தன் பத்தினியோடும், இரு நிலத்தில் - பெரிய பூமியின்மீது வீழ்ந்து, இறைஞ்சலோடும் - வணங்குதலும், (திருமகள் மனமகிழ்ந்து சொல்வாளாயினள்: எப்படியெனின்) நான்மறையோய் - நான்கு வேதங்களிலும் வல்லவனே! நன்று - நன்மையாகிய, உனது துதி - உனது தோத்திரத்துக்கு, மகிழ்ந்தேம் - மனங்களித்தோம்; இத் துதியை நவின்றோர் யாரும் - இந்தத் தோத்திரத்தைப் படித்தோரெல்லாரும், பொன்றல் அரு - அழிவில்லாத, பெரும் போகம் - பெரிய போகங்களை, நுகர்ந்திடுவர் - அநுபவிப்பார்கள்; ஈங்கு இதனை - இந்தத் தோத்திரத்தை, பொறித்த - எழுதின, ஏடு - ஏடானது, மன்றல்-வளம் பொருந்திய, மனையகத்து இருப்பின் - வீட்டினிடத்திலிருந்தால், வறுமை தரும்-வறுமையைக் கொடுக்கிற, தவ்வை - மூதேவியானவள், அவண்-அவ்விடத்தில், மருவல்செய்யாள் - பொருந்துதலைச் செய்யமாட்டாள்.

(பொ - ரை.) என்று சொல்லி, தமிழாசிரியராகிய அகத்தியர் தன் பத்தினியோடும் பெரிய பூமியின்மீது வீழ்ந்து வணங்குதலும், (திருமகள் மனமகிழ்ந்து சொல்வாளாயினள்: எப்படியெனில்), நான்கு வேதங்களிலும் வல்லவனே! நன்மையாகிய உனது தோத்

திரத்துக்கு மனங் களித்தோம்; இந்தத் தோத்திரத்தைப் படித்தோ ரெல்லாரும் அழிவில்லாத பெரிய போகங்களை அநுபவிப்பார்கள்; இந்தத் தோத்திரத்தை எழுதின ஏடானது வளம்பொருந்திய வீட்டி னிடத்தி லிருந்தால் வறுமையைக் கொடுக்கிற மூதேவியானவள் அவ்விடத்தில் பொருந்துதலைச் செய்யமாட்டாள்.

(வி-ரை.) மன்ற எனப் பாடமோதி தேற்றமாகவேனும் அசை நிலையாகவேனுங் கோடலுமாம். பன்னி - பத்நி என்னும் வடசொற் றிரிபு. பொன்றல் - அழிதல். அரு - அருமை, இன்மைமேற்று. பெரும் போகம் - சுவர்க்கலோக இன்பம். நுகர்தல் - அனுபவித்தல். பொறித்தல் - எழுதுதல். வறுமை-தரித்திரம். தவ்வையை ஜேஷ்டா தேவி என்பர் வடநூலார்; இதற்குப் பொருள் திருமகட்கு மூத்தவள் என்பது. மருவல்செய்யாள் என்பது ஒரு சொல்; பொருந்தாள் என் பது பொருள். நவின்றோர் என்பதில் பகுதி நவில். பொன்றல் என்பதற்குப் பகுதி பொன்று. (எ)

## இலக்குமி தோத்திரம் மூலமும் உரையும்

முற்றுப்பெற்றன.



உ

கடவுள் துணை.

## விநாயக கவசம், சிவ கவசம், சத்தி கவசம், சரஸ்வதி தோத்திரம், இலக்குமி தோத்திரம் இவற்றின்

# செய்யுள் முதற்குறிப்பகராதி.



செய்யுள் முதற்குறிப்பகராதி முற்றிற்று.